உ
ஓம்
பரப்பிரஹ்மணே நம:

# ஆனந்தபோதினி

"எப்பொரு ளெத்தன்மைத் தாயினு மப்பொருண்
மெய்ப்பொருள் காண்ப தறிவு"—திருவள்ளுவர்.


| தொகுதி 14 | விபவஸு பங்குனிமீ கஉ<br>1929ஸு மார்ச்சுமீ 14உ | பகுதி 9 |
| --- | --- | --- |

## கடவுள் வணக்கம்.

எந்தநாள் கருணைக் குரித்தாகு நாளெனவும்
என்னிதயம் எனைவாட்டுதே
ஏதென்று சொல்லுவேன் முன்னெடுபின் மலைவறவும்
இற்றைவரை யாதுபெற்றேன்
பந்தமா னதிலிட்ட மெழுகாகி யுள்ளம்
பதைத்துப் பதைத்துருகவோ
பரமசுக மாவது பொறுப்பரிய துயரமாய்ப்
பலகாலு மூர்ச்சிப்பதோ
சிந்தையா னதுமறிவை யென்னறிவி லறிவான
தெய்வநீ யன்றியுளதோ
தேகநிலை யல்லவே யுடைகப்பல் கப்பலாய்த்
திரையாழி யூடுசெலுமோ
சொந்தமா யாண்டநீ யறியார்கள் போலவே
துன்பத்தி லாழ்த்தன் முறையோ
சுத்தநிர்க் குணமான பரதெய்வ மேபரஞ்
சோதியே சுகவாரியே. (1)

கற்றும் பலபல கேள்விகள் கேட்டுங் கறங்கெனவே
சுற்றுந் தொழில்கற்றுச் சிற்றின்பத் தாடு சுழலினென்னும்
குற்றங் குறைந்து குணமே விடுமென்பர் கூட்டத்தையே
முற்றுந் துணையென நம்புகண் டாய்சுத்த மூடநெஞ்சே. (2)

பிடித்ததையே தாபிக்கும் பேராணவத்தை
அடித்துத் துரத்தவல்லா ரார்காண் பராபரமே. (3)

# அரும்பொருள் விளக்கம்.

1. இதனால் தாயுமான அடிகள் நிலையாத்தன்மையுள்ள உடம்பு உயிரோடுகூடி இருக்கும்போதே திருவருட்பேறு கிடைக்கவேண்டுமென்கிறார்.

(இ-ள்.) சுத்தநிர்க்குணமான மேலான தெய்வமே! மாட்சிமிக்க சுடரொளியே! இன்பசாகரமே! நினது திருவருளுக்கு நான் பாத்திரம் ஆகும் நாள் எது? என்று எனது மனம் என்னைத் துன்பம் செய்கிறது. தனிப்பெரும் இன்பம் (பரமசுகம்) சித்திப்பதற்குரிய வழிதான் என்ன? நெருப்பில் இட்ட மெழுகுபோல் மனம் உருகுவதா? அல்லது யோகப்பயிற்சியால் பலகாலும் மூர்ச்சை (வாயுஸ்தம்பனம்) போவதா? நான் இதுவரை முன்னுக்குப்பின் முரணான எண்ணங்களினின்றும் விடுபட்டு யாதொருவிதமான தெளிவும் பெற்றேனில்லை. எனது கருத்து என்ன? என்பதை நீ அறிவாய். என் அறிவுக்கு அறிவாக விளங்கும் உன்னைத்தவிர வேறு தெய்வம் உண்டோ? உடைந்த கப்பல் நல்ல கப்பலாக மாறிக் கடலுக்குள் போகாது. அதுபோல தேகம் அழிந்தபின்னர் உனது கிருபைக்குப் பாத்திரமாக முடியாது. நான் உனது உடைமை. சொந்தமாக என்னை ஆண்ட நீ தெரியாதவர்களைப்போல் பராமுகமாயிருந்து துன்பக்கடலில் அமிழ்த்துதல் நீதியா? என்க.

மலைவு—முரண், விரோதம். அற—நீங்க. பந்தம்—நெருப்புப்பந்தம். மூர்ச்சித்தல்--இங்கே வாயுஸ்தம்பனத்தைக் குறித்து நின்றது. ஆழி—கடல்.

2. இதனால் சற்சங்கத்தின் சிறப்பை வலியுறுத்துகிறார்.

(இ-ள்.) பெரிய மூடமனமே! பல நூல்களைத் தானாகக் கற்றும், பெரியோரிடத்தில் பற்பல கேள்விகளைக் கேட்டும் காற்றாடியைப்போல சுழன்று திரிந்து உலகபோகத்திற் சிக்கி அலைவதிற் பயன் என்ன? குற்றமற்று நற்குணஞ் சிறந்திருக்கிற அன்பிற் பெரியாருடைய கூட்டுறவையே முழுவதும் துணையாக நம்புவாயாக. அவர்கள் உன்னைக் கரையேற்றிவிடுவார்கள் என்க. கறங்கு-காற்றாடி.

சலியாது கற்றலினாலும் கேட்டலினாலும் மாத்திரம் பயனில்லை; இங்ஙனம் செய்தல் வீண் விவகாரத்திற் செலுத்திச் சிற்றின்பத்தில் உழலச் செய்யும் என்பார் "கற்றும் பல பல............சுழலினென்னும்" என்றார். கற்றுக் கேட்டலினும் சற்சங்கக் கூட்டுறவே ஒருவனைத் தூய்மை செய்து கரையேற்றும் என்பார் "குற்றங் குறைந்து.................மூடநெஞ்சே என்றார்.

3. இதனால் ஆணவத்தின் வன்மையைச் சுட்டி அதைப் போக்கவேண்டுமென்று விரும்புகிறார்.

ஆணவம் ஒருவனுடைய அறிவைப் போக்கிவிடும். ஆணவம் பெரியோர் நல்லுபதேசத்தைக் கேட்கச் செய்யாது. ஆணவத்தைப் போக்கலும் அரிது என்பார். பிடித்ததையே..............ஆர்காண் பராபரமே என்றார். ஆணவம்=அகங்காரம்.




## சமய உணர்ச்சி

உண்டி, உறக்கம், விஷயசுகம் முதலியவற்றைப் பொறுத்தவரை மக்களுக்கும் பிறவுயிர்கட்கும் எவ்வித வேற்றுமையும் இல்லை. இன்ப துன்ப உணர்ச்சி எல்லா உயிர்கட்கும் பொது. நாமரூப பேதந் தவிர எல்லா உயிர்களும் ஒன்றே. ஆனால் மக்கட்சாதி உயர்ந்ததாக மதிக்கப்படுகிறது. மனிதனுடைய தேகத்தைக் கொண்டோ அல்லது உயிரைக்கொண்டோ இந்த உயர்வு கற்பிக்கப்படுவதில்லை. உலகத்திலே மிகவும் பலம் பொருந்திய யானையையும் வீரஞ்செறிந்த சிங்கம் புலி முதலியவற்றையும் அடக்கி ஒடுக்கும்படியான விசேஷ அறிவு மனிதனிடம் அமைந்திருக்கின்றது. இதைத்தான் காரண காரிய உணர்ச்சி அல்லது பகுத்தறிவு என்பார்கள்; இது ஆறாவது அறிவாகக் கொள்ளப்படுகிறது.

விலங்கு முதலிய பிற உயிர்கட்கு இந்த அறிவு இல்லை. இன்ப துன்ப உணர்ச்சியும் சாதக பாதகத்தைத் தெரியும் அறிவும் அவைகட்கிருந்தாலும் இன்னது செய்தால் இன்னது விளையும் என்ற பகுத்தறிவாகிய காரண காரிய உணர்வு அவைகளிடம் இல்லை. உடை உடுத்தத் தெரியாத இயற்கை நிலையிலிருந்த மனிதன் இப்போது நாழிகைக் கொருவித ஆடை ஆபரண அலங்கார பூஷிதனாக விளங்குகிறான்; ஆகாயத்தில் பறக்கிறான். மின்சார சக்தியால் வாழ்க்கையில் நலம் தேடுகிறான். இன்னும் எத்தனையோ அற்புதங்களை நிகழ்த்தக்கூடியவனாயும் இருக்கிறான். விலங்கு முதலியனவோ என்றால் ஆயிரம் இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் எப்படி இருந்தனவோ அப்படியே இன்றும் இருக்கின்றன. இவைகளுக்கு ஆடை ஆபரணங்களில்லை. மாட மாளிகைகள் இல்லை. ஆகாய விமானம், ரயில், மோட்டார், வண்டி முதலிய வாகனங்கள் இல்லை. மின்சார இயந்திரங்கள் இல்லை. ஆகாராதிகளிலும் மாறுதல் இல்லை. இதிலிருந்து மனிதனுக்கும் பிற உயிர்கட்கும் உள்ள வேற்றுமை இனிது விளங்கும்.

சமயம், நாகரிகம் என்பன மனிதனுடைய பகுத்தறிவின் பயனாக ஏற்பட்டனவாகும். சமயமும் நாகரிகமும் ஒரு நியதிக்குட் பட்டிருக்கவில்லை. காலதேச வர்த்தமானங்கட் கேற்ப வேறுவே

இருக்கின்றன. நமது நாட்டு நாகரிகம் மததத்துவங்களை அடிப்படையாகக்கொண்டு கட்டப்பட்டதாகும்.

சமயம் என்பதற்குப் பலவித வியாக்கியானங்கள் சொல்லப்படினும் பேரின்ப நிலையைக் கண்டறியும் மார்க்கம் என்று கொள்ளுவது பொருந்தும். மனிதஜாதி தனது பகுத்தறிவின் பயனாக இயற்கையோடியைந்த வாழ்வினின்றும் மாறி, செயற்கை வாழ்வாகிய நாகரிகத்தில் உழலத் தலைப்பட்டுவிட்டது. மனிதவாழ்க்கையில் நாளாவட்டத்தில் அநாவகிய—தேவையில்லாத தேவைகள் பெருகின. ஐம்புலன்களையும் திருப்திசெய்தல் அசாத்தியமாக முடியவே வாழ்க்கையில் ஒருவித வெறுப்பு ஏற்பட்டுவிட்டது. மனிதனைப் பற்பலவிதமான வேட்கையும் பற்றும் பற்றித் துன்புறுத்தின. இன்பசாதனங்களைத் தேடி அடைவதைக்காட்டிலும் அவனுக்கு அவற்றினின்றும் விடுபடலே இன்பமாகத் தோன்றிற்று. இந்த உண்மையை அவ்வப்போது தோன்றிய பெரியோர்கள் அறிவுறுத்தினர். இன்பத்திற்கு ஆதாரமாகவுள்ள கடவுள் நிலையை விளக்கினர். அப்பெரியோர் கூறிய உண்மைகளே சமய சாஸ்திரங்களாகும். மக்களுடைய வாழ்க்கைநிலை அவ்வந்நாட்டுச் சமய சாஸ்திரங்களைப் பொறுத்ததாயிருக்கும். இதுவே எல்லா நாடுகளிலும் சமயங்களைப்பற்றிய பொது தருமமாகும்.

உலகத்தில் இந்தியாவின் நாகரிகமும் மதக்கொள்கைகளும் மிகவும் புராதனமானவை. இவற்றின் காலவரையறை எந்தச் சரித்திர நிபுணராலும் இன்னும் சரியாக நிர்ணயிக்கப்படவில்லை. மேனாடுகளில் லௌகிக விவகாரங்களின் அறிவு தீவிரமாகவும் நுணுக்கமாகவும் முன்னேறி யிருக்கிறது. இந்தியாவில் சமய சம்பந்தமான ஞானம் ஆழமாக வேரூன்றி அசைக்க முடியாத வகையில் பதிவு பெற்றிருக்கிறது. பெரும்பாலும் இந்தக் காரணத்தினாலேயே உலகியல் விஷயங்களில் நமது நாடு மேனாடுகளைவிடப் பிற்போக்கான நிலைமையில் இருந்து வருகிறது எனலாம்.

இதனால் மக்களுடைய இன்பவாழ்க்கைக்கே சமயம் ஏற்பட்டது என்பது இனிது விளங்கும். உலகில் எப்பாகத்தை நோக்கினும் இப்போது சமயப் புறக்கணிப்புக் கிளர்ச்சி வலுத்து வருகிறது. தெய்வத்தன்மைபொருந்திய சமயங்களுக்கு விரோதமான இத்தகைய கிளர்ச்சி உண்டாவானேன்? என்ற கேள்வி சகஜமாக எழும்.

சமய விரோதமான கிளர்ச்சிகளுக்குக் காரணங்கள் பல உண்டு. சமயத்தின் நலந்தரத்தக்க உண்மை நோக்கங்களெல்லாம் காலக்கிரமத்தில் மறைந்துவிட்டன. வெறும் சம்பிரதாயங்கள் மாத்திரம் நிலைத்து வழக்கத்தில் இருந்துவருகின்றன. இந்தப் போலிச் சம்பிரதாயங்கள் மக்கள் சமுகத்திற்குக் கேடு விளைத்துவருதல் பிரத்தியக்ஷம். இந்தப் போலி வழக்கங்களின் தீமைகளைச் சகியாதவர்கள்

சமயத்தையே அழிக்கவேண்டும் என்று பிரசாரம் செய்கின்றனர். இவர்கள் சமயங்களின் மாட்சிமிக்க உண்மைகளை அறிவதில் ஒரு சிறிதும் கவலை கொள்வதில்லை. சமயப்பற்றுடையவர்கள் எல்லாரும் அவர்களுடைய கண்களுக்கு அறியாமை யுடையவர்களாகவும் போலிகளாகவுமே காணப்படுகின்றனர். இம்மாதிரியான மனப் பான்மையுடன் கிளர்ச்சிசெய்தல் ஆபத்தாக முடியுமென்றே யாம் கவலைகொள்ளுகின்றோம்.

சமய உணர்ச்சி ஒன்று மாத்திரம் இல்லாதிருந்தால் மக்கட்கும் விலங்குகட்கும் ஒரு சிறிதும் வேற்றுமை இல்லை. இதனால் பொரு ளற்ற குருட்டு ஒழுக்க வழக்கங்களை நாம் ஆதரிப்பதாக வாசகர்கள் கருதிவிடக்கூடாது. சமயம் வேறு ஒழுக்க வழக்கங்கள் வேறு. சம யத்தோடு ஒழுக்க வழக்கங்கள் பிணைக்கப்பட்டுவிட்டன. நெடுங்கால மாக வழக்கத்தில் வந்துகொண்டிருக்கிற ஒழுக்கங்களை திடும்பிரவேச மாக விட்டுவிடும்படி வற்புறுத்துவதில் பல சங்கடங்கள் உண்டு. கிரமமான போதனையாலும் பிரசாரத்தாலும் மக்களுடைய மனப் பான்மையை மாற்றவேண்டும். இம்முறையில் காலதேச வர்த்த மானங்கட் கேற்ப ஒழுக்க வழக்கங்களைத் திருத்தி யமைத்தலே உசித மாகும். இதை விட்டுவிட்டுச் சமயத்தையே அழிக்கவேண்டும் என்று துணிந்து கூறுவது நியாயமா ? என்று கேட்கின்றோம். சம யம் இல்லையேல் மனிதத்தன்மையும் இல்லை. சமயம் ஒன்றே விலங் கினத்தினின்றும் மக்களை வேறு செய்து நிற்பதாகும். பகுத்தறிவு மேம்பட்ட எந்தநாட்டை நோக்கினும் அந்த நாட்டுமக்கள் ஏதோ ஒரு சமயத்தைப் போற்றிவருதல் கண்கூடு. சமய உணர்ச்சி மனித னுக்குள் இருக்கிற மிருகசுபாவத்தை ஒடுக்கி மாட்சியுறச் செய்வ தாகும். மனிதனைக் கடவுளாக்குவதும் சமயமே. சமயத்தை அழிக்க வேண்டும் என்ற பிரசாரம் உண்மையில் பயன்படாது. மக்களுக்குச் சமய உண்மைகள் விளங்காமல் இருக்கலாம். அவற்றை விளக்கிச் சமூகத்தை முன்னேறச் செய்தல் அறிஞர் கடமையாகும். இவற் றிற்கெல்லாம் கல்வி அடிப்படை. தக்க கல்வியும் மாசுபோக்கிய சமய உண்மைகளும் மக்களிடம் சிறந்து விளங்கவேண்டும். சமய உண்மைகளைப் பரப்ப ஏற்பட்ட மடங்களெல்லாம் தந்தம் கடமை களை மறந்து உறங்குகின்றன. சமய உணர்ச்சியை மேம்படச் செய் யும்படியான கோவில்களில் பல அக்கிரமங்கள் மலிந்து கிடக் கின்றன. இத்தகைய காரணங்களையே சமயத்தை அழிக்கவேண் டும் என்பவர்கள் தங்களுக்குச் சாதகமாக உபயோகப்படுத்திக் கொள்ளுகின்றனர். ஆதலால் சமூக சீர்திருத்தப் பெரியாரும் அறிஞ ரும் சமய உண்மைகளைச் சாதாரண மக்களுக்கு அறிவுறுத்திச் சீர் திருத்தம் செய்வார்களாக. எல்லாம்வல்ல திருவருள் நமது வேட் கையை நிறைவேற்றுவதாக.

ஓம் தத் ஸத்.

# ஆனந்த சந்திரோதயம்

S. V. V.

(402-ம் பக்கத் தொடர்ச்சி.)

"பக்தர்கள் பெருமை பார்க்க அருமை" சுமார் ஐம்பதாண்டுகட்கு முன்னர் வடநாட்டில் ரகுநாததாஸ் என்ற ஒரு பிரசித்த பக்தரிருந்தார். அவர் ஐரோப்பிய துரைத்தனத்தாரின் ராணுவத்தில் ஓர் சிப்பாய் வேலையில் அமர்ந்திருந்தார். அவர் பொறுப்புடனும், நம்பிக்கையோடும் வேலை பார்த்து வந்தமையால், ராணுவத் தலைவருக்கு அவரிடம் விசேஷ நம்பிக்கையும் அன்பும் ஏற்பட்டிருந்தது. அந்த சேனையின் பாசறைக்காப்பாளர் வேலையை ரகுநாதர் பார்க்கவேண்டிய முறை வந்தது. அவ்வாறே அவர் இரவில் காவல் புரிகையில், சாலைவழியே ஒரு பஜனை கோஷ்டியார் ராம பஜனை செய்து கொண்டு சென்றார்கள். அவர்களுடைய உத்சாகத்தையும் இன்னிசை வாத்தியங்களின் முழக்கத்தையும், அப்பக்தர்கள் புரியும் ஆனந்தக் கூத்தையும் காண ரகுநாதர் பரவசப்பட்டு, தனது உடுப்புகளைக் களைந்து ஒரு மூலையில் வைத்துவிட்டு, எவரும் அறியாவண்ணம் வெளியேறி, அப்பஜனை கோஷ்டியில் கலந்து கொண்டார். அன்றிரவு முழுதும் ஆடிப்பாடி மகிழ்ந்தார். இப்படி வெகு நேரமானதும் இவர் தமது காவலைவிட்டு எங்கேயோ ஓடிவிட்டாரென்ற புகார் சேனாதிபதியின் செவிக்கெட்டிற்று. பொழுது புலர்ந்ததும், ரகுநாதர் திரும்பி வநதார். சேனைத்தலைவர் அவரை அழைத்து "நீ அவ்விதம் நடந்துகொண்டது உண்மையா?" என்று வினவ, ரகுநாதர் "உண்மை" என்றார். சேனாதிபதி "அக்குற்றத்தின் தண்டனை யாதென நீ உணருவாயா?" என்றார். அதற்கு ரகுநாதர், "நன்றாக அறிவேன். வெடி குண்டுப் பிரயோகமே அக்குற்றத்தின் தண்டனையாகும்" எனலும், சேனைத்தலைவர், அவரது அஞ்சாமைக்கு வியந்து 'இந்த முறை உன்னை மன்னித்திருக்கிறேன். இனி, இங்ஙனம் நடந்து கொண்டால் மாண தண்டனை நிச்சயம்' என்று கூறி அனுப்பிவிட்டார்.

மறுநாளும் பஜனைகோஷ்டி முன்னிலும் பன்மடங்கு வைபவத்துடன் அவ்வழியே வந்தது. அன்றும் முதல் நாள்போல் காவல் புரியும் ரகுநாததாஸ் எவ்வளவோ முயன்றும், மனத்தினிடத்தில் தோல்வியடைந்து, 'வந்தது வரட்டும்' என்று துணிந்து, உடுப்புகளைக் களைந்து எறிந்துவிட்டு பஜனை கோஷ்டியில் கலந்து கொண்டு, நாத்தழும்பேறப் பொழுது புலரும் வரையில் வழுத்தித் தனது கடமையை மறந்த தண்டனைக்காக மனம் வருந்தாது திரும்பிவந்து நேராகத் தானே சேனாதிபதியிடம் சென்று தனது குற்றத்தை ஒப்புக்கொண்டு, தனது பிராணனை பகவதார்ப்பணம் பண்ண

நிச்சயித்து வகினர். சென்று தாம் செய்த பிழையைக்கூற, சேனாதிபதி "என்ன ரகுநாதா! உனக்கு பைத்தியம் பிடித்துவிட்டதா? நேற்று இரவு தான் நான் இரண்டுமணி சுமாருக்கு உன்னைக் காவல் ஸ்தானத்தில் பார்த்துச் சில வார்த்தைகள் பேசி உன் 'பீட்' புத்தகத்தில் கையெழுத்திட்டுத் திரும்பி னேனே!" என்றார். ரகுநாதர், "பகவானறிய நான் பதினொரு மணிக்கே ராம பஜனை கோஷ்டியுடன் சென்று விட்டேனே! தாங்கள் எப்படி என்னைப் பார்த்திருக்க முடியும்?" என்று கூறித்தனது சட்டைப் பையிலிருந்த புத்தகத்தை எடுத்துப் பார்த்தார். அதில் கையொப்பம் நன்றாகப் போடப் பட்டிருந்தது. ரகுநாதர் புளகாங்கித மெய்தினர்; ஸ்ரீ ரகுவீரனே இத் தகைய திருவிளையாடல் புரிந்தான் என்று அறிந்துகொண்டு, அன்றே தமது வேலையை 'ராஜினமா' செய்துவிட்டு, காவிபூண்டு, வைராக்கியமாய், சரஸ் வதி நதி தீரத்தில், ராமநாம சங்கீர்த்தனஞ் செய்தவாறு தமது காலத்தைக் கழிக்கலானர். ஹிருதய சுத்தியுள்ள பக்தனை அவர் என்றும் கைவிடுகிற தில்லை.

***

'உலகம் பலவிதம்' என்று நாம் அடிக்கடி சொல்லுவதுண்டு. இதில் விசேஷ அர்த்தமிருக்கிறது. நாடுகள்தோறும் சமயங்களும், பாஷைகளும், ஆகாரங்களும் வேறுபாடுள்ளனவா யிருக்கின்றன. ஒரு மனிதனுக்கு இன் னெரு மனிதனே, குணத்திலும், நிறத்திலும், தன்மையிலும், உணவிலும் கல்வியிலும் எவ்வளவோ வித்யாசப்படுகிறான். தகப்பனைப்போல் பிள்ளை இல்லை. ஒரே விதமான மதமும் பாஷையும் ஆகாரமும் சம்பத்தும் எங்கு மிருந்தால் உலகம் நடைபெறாதென்றே, பகவான் அநேக மதங்களையும், பற் பல பழக்க வழக்கங்களையும், பாஷைகளையும் உண்டாக்கியிருக்கின்றார். ஈஸ்வர சிருஷ்டிக் குட்பட்ட சகல பொருள்களும் காலத்திற்கும் இடத்திற் கும் ஏற்ப மாறுதலடைந்து வருகின்றன. அறுசுவையுடன் கூடிய உணவின்றி ஒரே ருசியுள்ள பதார்த்தத்தை உண்ண நம்மால் முடியுமா? உலகத்தில் மூன்றுபங்கு சமுத்திரமும் ஒரு பங்கு பூமியுமா யிருக்கின்றதே? அப்படி யில்லாவிட்டால் காலா காலத்தில் மழை பெய்யுமா? உலகில எல்லோருமே நல்லவர்களா யிருப்பதில்லை. ஒருவன் நல்லவன்; ஒருவன் துஷ்டன். ஒரு வன் உபகாரி; ஒருவன் அபகாரி. ஒருவனே ஒருவனுக்கு நல்லவன்; அவனே இன்னொருவனுக்குக் கெட்டவன். தாழைமலர் நல்ல வாசனை யுள்ளதா யிருக்கிறது. அதன் மேலிருக்கும் மடல்களோ முட்கள் நிறைந்தவா யிருக்கின்றன. அந்த மடல்களை ஏன் உண்டாக்கினர் என்று நாம் கடவுளை நொந்து கொள்வதா? ஆகையால், நல்லதற்கொரு பொல்லாதது இருந்தே தீருகின்றது. பொய்யென்று ஒன்றிருந்தாற்றான் உண்மையின் பெருமை வெளிப்படும். வெயிலிருந்தாற்றான் நிழலின் அருமை தெரியும். தாழை மலரை நாம் தரித்துக் கொள்கின்றோமே யொழிய அதன் மேலுள்ள முட்

கள் நிரம்பிய மடல்களைச் சூடுவதில்லை. அவற்றை எடுத்தெறிந்து விடுகிறோம். அதுபோல உலகம் பலவிதமாயிருந்தாலும் சாதுக்கள் சத்தான ஒரு விதத்தைத் தேர்ந்து அவ்வழியில் நடந்து நற்கதி யடைகிறார்கள். (ஸ்ரீ ராம தீர்த்தர் வாக்கு.)

***

"சருகரிக்க நேரமன்றிக் குளிர்காய நேரமில்லை" மனிதர்கள் பிறந்த அந்தக்கணம் முதல் 'சோ' வென்று பிராணவாயுவை முதல் முதலாக உள்ளே இழுத்து, 'ஹூம்' என்று வெளியேவிட்டு, சோகப்பட்டு, கேவலம் இந்த ஊனுடம்பை வளர்க்கவும் இதற்கான சௌகரியங்களைத் தேடவும் எத்தனையோ பொய், களவு, காமம், வெகுளி, மயக்கம், சூது வாது செய்து திரிகின்றார்களே யன்றி, மனமார ஒருகணமாகிலும் பகவானைத் தூய மனதுடன் தொழுவதே இல்லை. மென்மேலும் பாவ மூட்டையின் பளுஏறுகின்றது. அந்த பளுவைச் சிறிது இறக்க உலகமென்ற இடத்தில் (நிழலில்) உள்ள பிறப்பென்ற சுமைதாங்கியை நாடுகிறார்கள். இவற்றிற்கஞ்சி பகவானது சரணாரவிந்தங்களில் கர சரணாதி அவயவங்களால் மெய்த்தொண்டு புரிந்து முக்திக்குச் சாதனமாயுள்ள இந்தக் கேவல சரீரத்தைச் சிறிது காத்தற்பொருட்டு, 'உண்பது நாழி உடுப்பது நான்கு முழம்,' என்ற மட்டில் திருப்தி ஆசைகளை யடக்கி, பக்தர்கள் மேன்மை யடைவார்கள். ஏனையோர் நிலை, சருகரிக்க நேரமன்றிக் குளிர்காய நேரமில்லை என்பதாகவே முடிகின்றது.

***

"நல்லது கண்டாற் பெரியோர் நாயகனுக்கு என்று அதனை நல்குவார்" வரகுணபாண்டியன் என்ற ஓர் அரசன் தனக்கேற்பட்ட பிரம்மகத்தி தோஷம் திருவிடை மருதூர் மருதவாணப் பெருமான் கிருபையால் நீங்கப் பெற்று அத்தலத்தின்கண் வசித்திருக்கும்போது, தனது மனைவியின் பேரழகைக்கண்டு இந்த அழகியைச் சிவபெருமானுக்குக் கொடுக்க வேண்டுமென்று கருதி, அவளை அழைத்துக்கொண்டு இரவிலே திருக்கோயில் வாயிலை யடைந்து, "கோயிலைத் திற விடைமருதா வெனக்கூவ—வாயிலைத் திறந்திறைவனும் "வரகுண!" வென்றார். வரகுணன் அவளை மருதவாணருக்கு அளித்துத் திரும்பினான். மருதவாணர் அப்பெண்ணை விழுங்கிக் கையை மட்டும் விழுங்காமல் வெளித்தோன்ற வைத்திருந்தார். பொழுது புலர்ந்ததும் பலரும் இதைக்கண்டு வியந்து கூறுவதை வரகுணன் கேள்விப்பட்டு ஓடி "சுவாமி! பாவியாகிய நான் பிடித்ததென்று இக்கையை மட்டும் விழுங்காது நீக்கிவிட்டீர்?" என, மருதவாணர் அக்கையையும் விழுங்கினார். கண்ணப்ப நாயனர், தான் சுவைத்துப் பார்த்து ருசியானவற்றைத் தனியே பகவானுக்கென்று வைத்துவிட்டார்; அவற்றைப் பகவான் ஏற்றார். அரிவாட்டாய நாயனர் சிவ நேசராய் நெல்லரிசி, செங்கீரை, மாவடு ஆகிய மூன்றையும் திருவமுதாகச் செய்வித்து வந்தார். அதைச் சிவ பெருமான் அன்போடு ஏற்றுக்கொண்டு அவரது உண்மையான பக்திக்கு மெச்சி முத்தியளித்தார். இப்படிப் பெரியோர் எதையும் பகவதார்ப்பணம் பண்ணுவது வழக்கம்.

---

சந்தாதாரர்களுக்கு:—சந்தா நம்பர் தெரியாதவர்கள் மாதமாதம் வரும் சஞ்சிகையின் மேலுள்ள விலாசத்தில் குறிக்கப்பட்டிருக்கும் நம்பரைப் பார்த்துக் குறித்து வைத்துக்கொள்ளக் கோருகிறோம்.




## உலக ஞானம்.

(410-ம் பக்கத் தொடர்ச்சி.)

(சிவானந்தசாகர யோகீஸ்வரர்)

திருடன், திருடு நெஞ்சுள்ளவன், குடிக்கிற பிராமணன், தப்பொழுக்க முள்ளவன், படைச்சேவகன், வேதத்தை விற்கிறவன் இவர்கள் தண்ணீர் கொடுக்கக்கூடாத் தகாதவர்களாயிருந்தாலும், விருந்தாக வந்தால் பிரியமாகவே நடத்தவேண்டும். உப்பு, சமைத்தசாதம், தயிர், பால், தேன், நெய், எண்ணெய், எள், மாம்சம், கனி, கிழங்கு, கீரை, வாசனைத் திரவியம், பாகு முதலியவைகளைப் பிராமணன் ஒருபோதும் விற்பனை செய்யக்கூடாது. ஒருபோதும் கோபத்துக்கு இடந்தராதவன், களிமண், பொன், கல் இவைகளைச் சமனாய்ப் பார்க்கிறவன், துக்கத்தை அடக்கியவன், சிநேகம் பகைகளை விரும்பாதவன், புகழ் இகழ் இரண்டையும் சமமாகமதிக்கிறவன், விருப்பு வெறுப்புகளைக் கடந்தவன், பிட்சுக்களில் சிறந்த யோகியாவான். வனத்தில் தானாகவே உண்டாகிற தானியம் கிழங்கு இலைகளைப் புசித்து ஜீவிக்கிறதவசி, ஆத்மாவை அடக்கினவன் (தன்னடக்க முள்ளவன்) ஆராதிக்கிற அக்கினியைப் பத்திரமாகக் காப்பாற்றுகிறவன், வனத்தில் வசித்துக்கொண்டு அதிதிகளை உபசரிக்கிறவன், இவர்களும் முன்சொன்னவர்களுக்குச் சரியான யோகியாவார். அறிவுள்ள மனிதனுக்கு இடைஞ்சல் செய்துவிட்டுத் தூரத்திலிருந்துகொண்டு அவன் சமாசாரங்களை விசாரிக்கக்கூடாது. ஏனென்றால் தீங்கு செய்யப் பட்டவனுக்குப் புஜங்கள் நீண்டிருக்கின்றன. ஆகையால் அவன் தீமைகளை எளிதில் செய்யக்கூடியவனுவான். நம்பத்தகாதவர்களை ஒருபோதும் நம்பக்கூடாது. நம்பக்கூடியவர்க ளிடத்திலும் அதிக நம்பிக்கை வைக்கக்கூடாது. ஏனென்றால் நம்பிக்கை வைக்கப்பட்டவனிடத்திலிருந்து உண்டாகும் தீமை நம்பினவனை வேரோடு அழித்துவிடும். பகையைவிட்டுவிட வேண்டும். தன் மனைவியைக் காப்பாற்றவேண்டும். பிறருக்குச் சொந்தமானதை அவர்களுக்குக் கொடுத்துவிட வேண்டும். இனிமையாகப் பேசவேண்டும். ஒருவன் இனிய பேச்சை யுடையவனாய், மனைவியைக் கூப்பிடும்போது மரியாதையாய் மதுரமான வசனத்தால் கூப்பிட வேண்டும். ஆனால் அவளுக்கு அடிமையா யிருக்கக்கூடாது. புண்ணியவதியும் வாழ்வுள்ளவளுமான மனைவி மரியாதை செய்யத்தக்கவளும், அந்த வீட்டுக்கு ஆபரணமுமாயிருக்கிறவளுமாவாளென்று கூறப்படுகிறாள். அவளே குடும்ப வாழ்க்கைக்குச் சிறந்தவள் ஆகையால் அப்படிப்பட்டவர்களை விசேஷமாகக்காப்பாற்ற வேண்

டும். தன் பிதாவினுடைய அந்தப்புரத்தையும், மாதாவினுடைய சமையல் அறையையும், பசுவையும் தன்னுடைய பொருள் போலக் கருதிப்பார்க்க வேண்டும். பயிரைத் தன்னைப் போலவே கருதிப்பார்க்கவேண்டும். வைசியர்கள் அதிதிகளை வேலைக்காரர் மூலமாகத் தேடவேண்டும்; பிராமணன் தன் புத்திரனைக்கொண்டு தேடவேண்டும்.

நெருப்புக்குத் தண்ணீர் உற்பத்திஸ்தானம். க்ஷத்திரியர்கள் பிராமணரிடத்தில் உற்பத்தியாகிறார்கள். இரும்புக் கல்லில் உற்பத்தியாகிற தீ, இரும்பு, க்ஷத்திரியன் இம்மூன்றின்சக்தி மற்ற எல்லாவற்றையும் தாக்கக் கூடும். ஆனாலும் தங்களுக்கு உற்பத்தி ஸ்தானங்களிடத்தில் மாத்திரம் சக்தி குன்றிப்போய் விடுகின்றன. தீயானது கட்டைக்குள் மறைந்து வெளிப் படாமலிருக்கின்றது. நல்லவர்களும் பொறுமை யுள்ளவர்களும் உயர் குடியிற் பிறந்து அக்கினிபோன்ற சக்தியுடையவர்களா யிருக்கிறார்கள். ஆயினும் அவர்கள் தங்களுக்குள் மறைந்திருக்கிற சக்தியை வெளியாகும்படி புலப் படுத்துகிறதில்லை. தன் ஆலோசனையைப் பிறர் அறியாமல் காத்துக்கொண்டு பிறர் யோசனையைத் தூதர்மூலமாகத்தெரிந்துகொள்கிற அரசன் நெடுங்காலம் சுகத்துடன் வாழ்வான். தான் செய்ய நினைத்திருக்கிறதைப பிறர் அறியாமல் காப்பாற்ற வேண்டும். ஒருவருக்கும் சொல்லக்கூடாது. தர்மம் அர்த்தம் இவைகளைப்பற்றி நீ யோசித்திருப்பதை அது முடிகிறவரைக்கும் வெளியிடக் கூடாது. உன் மந்திராலோசனையை ஒருபோதும் பகிரங்கப்படுத்தாதே. மலைச் சிகரத்தின்மே விருந்தாவது, மாளிகையின் மேல் நிலையிலிருந்தாவது, செடி கொடி மரங்களடர்ந்த வனத்திலிருந்தாவது யோசனையை முடிக்கவேண்டும். கல்வி அறிவில்லாத சிநேகிதனும், படித்திருந்தும் மன அடக்க மில்லாத சிநேகிதனும் பொக்கிஷஸ்தான இரகசியங்களை அறியத்தகாதவர்கள். பரிக்ஷித்து அறியாமல் ஒருவனையு மந்திரியாக நியமிக்கக்கூடாது.

ஏனென்றால் அரசிறை வருமானம், மந்திராலோசனை யிவைகள் மந்திரியையே அனுசரிக்கின்றன. தர்மம் அர்த்தம், காமம் இவைகளுக்கொத்துக் காரியத்தைச் செய்கிறவனும், அந்தச் செய்கை முடிந்தபின் வெளிப் படுத்துகிறவனுமான மந்திரியையுடைய அரசன் இராஜாக்களுள் மேலானவன். அடக்கமான மந்திரியையுடைய அரசன் நிச்சயமாகவே காரியசித்தி பெறுவான். அறிவில்லாமை யால் காரியங்கள் குறைவை அடையும்படி செய்கிறவன், அது சரியாய் முடியப்பெறாமையால் தன் ஜீவனையும் இழப்பான். புகழ்ச்சிதரக்கூடிய காரியங்களை மகிழ்ச்சியுடன் செய்யவேண்டும். அப்படிப் பட்ட காரியங்களை விட்டுவிட்டால் பின்னால் வருத்தப்பட நேரிடும். வேதாத்தியாயனம் பண்ணாத பிரமாணன் சிரார்த்த காரியத்துக்கு உபயோகப் படமாட்டான். அது போலவே ஆறுவிதமான அரசாங்க விஷயங்களை அறியாத அரசன் அரசாட்சிக்கு உபயோகப்படமாட்டான். விருத்தி, குறை, நிலுவை, இவைகளை கண்ணோட்டம் செய்கிறவனும், ஆறு உபாயங்களை உணர்ந்தவனும், தன் நிலைமையை உணர்ந்தவனுமான அரசன் உலகம் முழுமையும் தன் குடைக்கீழ்க்கொண்டு நெடுங்காலம் அரசு புரிவான். எப்போதும் புகழப்படுகிற காரியங்களையே செய்யவேண்டும். கோபத்தையும் மகிழ்ச்சியையும் சரியாக உடையவனும், செய்யவேண்டிய காரியங்களைத் தானே நேரில் பார்க்கிறவனும், பொக்கிஷத்தைத் தன் அதிகாரத்துக்குள் வைத்துக்கொண்டிருக்கிறவனுமான அரசன் உலகம் முழுமையும் தன் அரசாட்சிக்குள் அடக்கி ஆளுவான். அரசன் தன்னுடைய கீர்த்தியாலும் தன் தலை

யின்மேல் பிடிக்கிற குடையாலும் திருப்தி அடையவேண்டும். தன் வேலைக்காரர்களுக்கு அரசிறை வரியில் பாகம் கொடுக்கவேண்டும். எந்தப் பொருளையும் அவன் தனியாக அடையப்படாது. பிராமணன் பிராமணனை அறிவான், கணவன் தன் மனைவியை அறிவான், அரசன் மந்திரியை அறிவான். சக்கரவர்த்தி சக்கரவத்தியை அறிவான். கொல்லத் தக்கவன் தன்னிடம் சிறையானால் அவனை விட்டு விடக்கூடாது. பலஹீனனாயிருக்கிறவன், தன் சத்துரு கொல்லத்தக்கவனாயிருந்தாலும் அவனுக்கு மரியாதை செய்து வணக்கமாயிருக்கவேண்டும். ஆனால் தனக்குப் பலமுண்டானபோது அவனை உடனே கொல்லவேண்டும். கொல்லாவிட்டால் பெரிய அபாயம் நேரிடும். தேவர்கள் அரசன் பிராமணர்கள் விருத்தர் குழந்தைகள் ஆதரிப்பார் இல்லாதவர்கள் இவர்களிடத்தில் பிரயத்தனப்பட்டாவது கோபத்தை அடக்கிக் கொள்ளவேண்டும். அனாவசியமாகச் சண்டை செய்யக்கூடாது. அது மூடர்கள் செய்யத்தக்கது. இப்படிச் செய்தால் இந்த உலகத்தில் பெரிய கீர்த்தியையும் துக்க நிவர்த்தியையும் சந்தோஷத்தையும் அடைவான். பயனில்லாத தயவையுடையவனும், பயனில்லாத கோபத்தை யுடையவனுமான அரசனை ஸ்திரீகள் நபும்ஸகனை வெறுக்கிறதுபோல ஜனங்கள் வெறுப்பார்கள். அறிவே செல்வம் அடைவதற்குக் காரணமாவதில்லை. தரித்திரத்துக்கு தரித்திரமும் காரணமாகாது. அறிவுள்ளவன் உலகத்தின் பேதாபேதங்களை அறிவான். மற்றவர்கள் அறியமாட்டார்கள். வயதினால் பெரியவர்களையும், நல்ல நடக்கையையும், கல்வியையும், அறிவையும், ஐசுவரியத்தையும், உயர் குடும்பத்தையும் மூடர்கள் எப்போதும் அலக்ஷியம் பண்ணுவார்கள். துர்க்குணங்கள், அறிவில்லாமை, பொறாமை, பாவம், கோட் சொல்லல், கோபம் இவைகளை யுடையவர்கள் சீக்கிரத்தில் கேடு அடைகிறார்கள். வஞ்சனையில்லாமை தானம் லௌகிகவிதிகள் அடக்கமான பேச்சு இவைகள் எல்லாரையும் வசமாக்குகின்றன. கபடமில்லாதவன், முயற்சியுள்ளவன், நன்றியுள்ளவன், வஞ்சகமில்லாதவன் இவர்கள் பொக்கிஷத்தில் திரவியமில்லாதிருந்தாலும் மந்திரிகள் சிநேகிதர்கள் வேலைக்காரர்கள் இவர்களை அடைகிறார்கள். புத்தி, மன அடக்கம், புலனடக்கம், பரிசுத்தம், கொடுஞ் சொற் கூறாமை சிநேகிதர்களுக்குப் பிரியமில்லாததைச் செய்யாமை இவைகள் ஐசுவரியமாகிற நெருப்புக்கு விறகுகளென்று சொல்லப்படுகின்றன. பிறருக்கு சொந்தமானதை அவர்களுக்குக் கொடுக்க விரும்பாதவன், வெட்கமில்லாதவன், துஷ்டன் இவர்களை அவசியம் விலக்கி விடவேண்டும். குற்ற மற்றவனுக்குக் கோபம் மூட்டுகிற துஷ்டன் ஒரே அறையில் பாம்புடன்கூடி வசிப்பவனை ஒப்பான். இராவில் அவன் சமாதானத்துடன் தூங்கமாட்டான். தங்கள் நிலைமையை இழந்தவர்களையும், பொருள்வரும் வழியை இழந்தவர்களையும் தேவர்களைப்போலக்கருதிச் சந்தோஷப்படுத்தவேண்டும். ஸ்திரீகளைப்பற்றிய அபிப்பிராயமுடையவர்கள், ஜாக்கிரதை யில்லாதவர்கள், துஷ்டகுணமுள்ளவர்கள், குலாசாரத்தினின்றும் தவறினவர்கள் இவர்கள் காரியசித்தி பெறுவது சந்தேகம். ஸ்திரீ, வஞ்சகன், பாலர் இவர்கள் வழிபற்றி நடப்பவர்கள் கல்லால் செய்த ஓடத்தில் ஏறி ஆற்றைக் கடப்பவர்களைப்போல முழுகிப்போவார்கள். காரியத்தின் விசேஷ இயல்பை அறியாமல் சாதாரண இயல்பை அறிந்தவர்களையும் நான் புத்திமானென்று கருதுகிறேன். ஏனென்றால் விசேஷ இயல்பை அறிவதற்கு ஒத்தாசை வேண்டப்படுகிறது. சோரன் விகடகவி நிந்திக்கப்பட்ட ஸ்திரீ இவர்

களால் புகழப்படுகிறவர்கள் உயிரோடிருந்தும் செத்தவர்களேயாவார்கள். அரசனே! நீர் அளவில்லாத சக்தியையுடைய பாண்டவர்களை விலக்கிவிட்டு உமது புத்திரனிடத்தில் நம்பிக்கை வைத்திருக்கிறபடியால் நீரும் துன்பப்படுவீரென்று விதுரர் சொன்னார்.

அரசன்—விதுரா! வாழ்வு தாழ்வுகளை மனிதன் தானாகவே செய்து கொள்கிறதில்லை. அவன் சூத்திரக் கயிற்றினால் ஆட்டப்படுகிற மரப்பதுமையை ஒத்து இருக்கிறான். கடவுள் மனிதனை விதியின் வசத்தில் விட்டிருக்கிறார். ஆகையால் மேலே சொல் என்றான்.

விதுரர்—அகாலத்தில் பேசுவதினாலே பிரகஸ்பதிகூடப் புத்தியீனனாய் அவமானம் அடைகிறான். ஒருவன் கொடையினால் வசமாகிறான். மற்றொருவன் ஔஷதத்தினால் வசப்படுகிறான். ஆயினும் சுபாவத்தில் வசப்படுகிறவனே நிலையாயிருப்பான். பிறராலே வெறுக்கப்படுகிறவன் யோக்கியன் என்றாவது, புத்திசாலி என்றாவது, ஞானி என்றாவது மதிக்கப்படுகிறதில்லை. நேசிக்கிறவனுக்கு எல்லா நன்மைகளையும் செய்கிறார்கள். வெறுக்கப்படுகிறவனுக்குத் தீமையே செய்கிறார்கள். லாபந்தரும் சிறிய நஷ்டத்தைப் பெரிதாக எண்ணப்படாது. ஏன் என்றால் இலாபத்தைத் தருவது ஒருபோதும் நஷ்டமாகாது. மேலும் நஷ்டத்தைக் கொடுப்பது எதுவோ அதுவே நஷ்டமாகும். சிலர் செல்வத்தாற் பெரியவர்களா யிருக்கிறார்கள். சிலர் குணத்தால் சிறந்தவர்களா யிருக்கிறார்கள். செல்வத்திற் சிறந்தவர்களைவிட்டுக் குணத்தாற் சிறந்தவர்களையே அங்கீகரிக்கவேண்டும். குணங்கள் நிறைந்து வணக்கமுள்ளவனாயிருக்கிறவன் ஒருபோதும் பிறருக்குத் தீமை செய்யான். பிறர் குற்றங்களையே பார்க்கிறவர்கள் பிறருடன் சண்டையிடுவதிலேயே முயற்சியாயிருக்கிறார்கள். எல்லா விஷயத்திலும் பிறருக்குத் தீமையே செய்கிறார்கள். கொடிய தோற்றத்தை யுடையவர்களும், சகவாசத்தினாலே அபாயத்தை யுண்டாக்குகிறவர்களுமானவர்களுக்குப் பொருள் கொடுப்பது தகாது. கொடுப்பது பாபமாகும். அவர்களிடத்திலிருந்து ஒன்றை வாங்குவதும் அபாயத்துக்கிடமாகும். சண்டையிடுகிறவர்களும், பேராசையுள்ளவர்களும், நாணமற்றவர்களும், வஞ்சனையுள்ளவர்களும் நெறிகெட்டவர்கள். ஆகையால் அவர்களுடன் ஒருபோதும் சிநேகம் செய்யக்கூடாது. மந்த சுபாவமுள்ளவர்களையும் அப்படியே விலக்கிவிடவேண்டும். ஈனர்களுடைய சிநேகிதம் ஒழிந்தபோது அதனால் அடையத் தக்க இலாப நஷ்டங்களுங் கூடவே ஒழிகின்றன. பிறகு அந்த ஈனர்கள் பழைய சிநேகிதர்களைப்பற்றி யிழிவாகவே பேசுவார்கள். அவர்களுக்கு நஷ்டத்தையும் உண்டாக்குவார்கள். அந்த நஷ்டம் சிறிதாக இருந்தாலும் மன அடக்கமில்லாமையால் எப்போதும் சமாதானமில்லாமலேயிருப்பார்கள். புத்திசாலியானவன் எல்லாவற்றையும் நன்றாய் யோசித்துச் சிந்தித்து இந்தக் கொடியவர்களுடைய சிநேகத்தை முற்றும் ஒழித்துவிடவேண்டும். எளியவர்களும் ஆதரவில்லாதவர்களுமான பந்துக்களுக்கு உதவி செய்கிறவன் புத்திரர்களையும் பசு முதலியவைகளையும் பெற்று இன்பத்துடன் நெடுங்காலம் வாழ்வான். தன் பந்துக்கள் நல்ல குணங்கள் இல்லாதவர்களாயிருந்தாலும் அவர்களை ஆதரிக்கவேண்டும். தன் சொந்த நன்மையை விரும்புகிறவன் தன் பந்துக்களுடன் ஒருபோதும் சண்டையிடக்கூடாது. தன் பந்துக்களுடன் கூடியே சுகத்தை அனுபவிக்கவேண்டும். ஒருவரோடொருவர் சேர்ந்து புஜிக்கவேண்டும். சேர்ந்து சம்பாஷிக்கவேண்டும். விரோதப்படக்கூடாது.

(தொடரும்.)

# மந்திரங்கள்.

(பண்டித K. V. தேவராஜ சாஸ்திரிகள்)

1. ஆண் பால், பெண் பால், ஒன்றன் பால், என மந்திரங்கள் மூவகையாம். 'ஹூம், பட்' என்ற பதங்களைக் கொண்டு முடிகிற மந்திரங்களுக்கு ஆண்பால் மந்திரங்களென்றும், 'ச்வாஹா' என்ற பதத்தைக் கொண்டு முடிகிறவற்றிற்குப் பெண்பால் என்றும், 'நம:' என்ற பதத்தைக் கொண்டு முடிகிறவற்றிற்கு ஒன்றன் பாலெனவும் பெயர்.

உதாரணம்:—

"ஓம் ஹ்ரீம், ஸ்புரஸ்புர, ஸ்புரஸ்புர, ஸ்புரஸ்புர, கோர கோரதனுரூப சட சட, ப்ரசட ப்ரசட கஹ கஹ, வம வம, பந்த பந்த, காதய காதய ஹூம் பட்" இது ஹூம்பட் என்ற பதத்தைக்கொண்டு முடிகிறபடியால், ஆண் பால் மந்திரம்.

"ஓம், ஹ்ரீம், விரி, விரி கணபதி வரவரத ஸர்வலோகம்மே வசமானய ஸ்வாஹா" இது ஸ்வாஹா என்ற பதத்தைக்கொண்டு முடிகிறபடியால், பெண்பால் மந்திரம்.

"ஓம், க்ஷம் நம:" இது நம: என்ற பதத்தைக் கொண்டு முடிகிறபடியால் ஒன்றன் பால் மந்திரம்.

(2) ஒன்றுமுதல் பதினாறு எழுத்துக்களுள்ள, மந்திரங்களுக்கு பால மந்திரங்களென்றும், பதினேழு முதல் இருபது எழுத்துக்களுள்ளவற்றிற்கு ப்ரௌட மந்திரங்களென்றும், இருபதுமுதல் எல்லாவற்றிற்கும், விருத்த மந்திரங்களென்றும் பெயர்.

## (3) மந்திரம் ஜெபம் செய்யத்தக்க காலம்.

காற்று தென்பாகத்தில் வீசும் காலத்திற்கு தக்ஷிணாயனம் என்று பெயர். அப்பொழுது மந்திரங்களிலிருக்கும் குறிலெழுத்துக்களெல்லாம், விழித்துக்கொள்கின்றன. குறிலெழுத்தை முதலிலுடைய மந்திரங்களும் விழித்துக் கொள்கின்றன. அப்பொழுது மற்ற எழுத்துக்களும், மந்திரங்களும் நித்திரை செய்கின்றன. காற்று வடபாகத்தில் வீசும் காலத்திற்கு உத்தராயணம் என்று பெயர். அப்பொழுது நெடில் எழுத்துக்களும், அவைகளை முதலிலுடைய மந்திரங்களும் விழித்துக்கொள்கின்றன. அப்பொழுது மற்ற எழுத்துக்களும், மந்திரங்களும் நித்திரை செய்கின்றன. காற்று தென்பாகத்திலிருந்து வடபாகத்திற்குச் செல்லும்பொழுது சில காலம் அசைவற்றிருக்கிறது. அக்காலத்திற்கு விஷுவம் என்று பெயர். அப்பொழுது லு, லூ என்ற இரு எழுத்துக்களும் விழித்துக்கொள்கின்றன. வடபாகத்திலிருந்து காற்று தென்பாகத்திற்குச் செல்லும்பொழுது சிலகாலம் அசைவற்றிருக்கிறது. அதற்கும் விஷுவமென்று பெயர். அப்பொழுது ரு, ரூ என்ற இரு எழுத்துக்களும் விழித்துக் கொள்கின்றன. அல்லது

பிராண வாயுவையும், அபான வாயுவையும் சமரஸ நிலைமையில் நிறுத்தி மூலாதாரத்தினின்று மேலே செல்லும் மின்னல் கொடிபோல், ஒரே க்ஷணத்தில் எல்லா சக்கிரங்களையும் ஆக்ரமிக்கும், எல்லையற்ற ஆனந்தத்தை அளிக்க வல்லமையுடைய, குண்டலி சக்தியை எழுப்பி, சிவசக்தி சமரஸ நிலைமையையடையலான ஓர் உபாஸகனுடைய ஆனந்த அனுபவ நிலைமை, எல்லா மந்திரங்களுக்கும் ப்ரபோத காலமென்று சிலர் கருத்து. எல்லா மந்திரங்களையும் ப்ரபோத காலத்தில் ஜெபம் செய்யவேண்டும். அ, ஆ முதலிய எழுத்துக்களுடன் லகரம் வரை அனுஸ்வரத்தைச் சேர்த்து ஜெபம் செய்ய வேண்டிய மந்திரத்துடன், தனித்தனியாகச் சேர்த்து, க்ஷகரத்தை மாத்திரம் உச்சரித்து, மறுபடி லகரம் முதலிய அக்ஷரங்களுடன் விசர்க்கம் சேர்த்து ஜெபம் செய்ய மந்திரம் சீக்கிரத்தில் பயனையளிக்கும்.

## (4) மந்திரத்தை உபதேசிக்கும் குருவின் லக்ஷணம்.

உயர்குலத்தில் பிறந்தவராயும், நல்லொழுக்கமுடையவராயும், மந்திர சாஸ்திரத்தின் தத்வங்களை அறிந்தவராயும், பொறுமையுடையவராயும், நிக்ரஹ அனுக்ரஹம் செய்ய சக்தியுடையவராயும் இருக்கவேண்டும்.

## (5) மந்திரத்தை உபதேசம் பெற்றுக்கொள்ளும் மாணக்கன் லக்ஷணம்.

உயர்குலத்தில் பிறந்தவனாயும், நல்லொழுக்கமுடையவனாயும், மந்திர சாஸ்திரத்தின் தத்வங்களைக் கற்றுக்கொள்ள விருப்பமுடையவனாயும், பொறுமையுடையவனாயும் இருக்கவேண்டும். மந்திரத்தைக் கற்றுக்கொள்ளும் மாணாக்கர்கள், சித்தர்கள், சாத்யர்கள், சுசித்தர்கள், அரிகள் என்று நான்குவகை. சித்தர்களும், சுசித்தர்களும் உத்தமர்கள். சாத்யர்கள் மத்யமர்கள். அரிகள் அதமர்கள். மறுபடியும், சித்தசித்தர்கள், சுசித்த சித்தர்கள், சாத்யசித்தர்கள், அரிசித்தர்களென்றும், சித்தசுசித்தர்கள், சுசித்த சுசித்தர்கள், சாத்ய சுசித்தர்கள், அரிசுசித்தர்கள், என்றும், சித்தசாத்யர்கள், சுசித்த சாத்யர்கள் சாத்ய சாத்யர்கள், அரிசாத்யர்களென்றும், சித்தாரிகள், சுசித்தாரிகள், சாத்யாரிகள், அர்யாரிகள் என்றும், பதினாறுவகை. இவ்வாறு, சித்த சாத்யர்களை சோதித்து குரு, மந்திரத்தை உபதேசம் செய்யவேண்டும். ஆனால் நரஸிம்ஹ மந்திரங்களுக்கும், சூரிய மந்திரங்களுக்கும், வராஹ மந்திரங்களுக்கும், மூன்று அக்ஷரங்களையுடைய மந்திரங்களுக்கும், கனவில் கண்ட மந்திரங்களுக்கும், பெண்ணால் கொடுக்கப்பட்ட மந்திரங்களுக்கும், மாலா மந்திரங்களுக்கும், சித்தர்களை சோதிக்க வேண்டியதில்லை.

## (6) சித்த சாத்யர்களை சோதிக்கும் முறை.

கிழக்கு மேற்காக ஐந்து கோடுகள் கிழித்து, அப்படியே அவைகளின் மேல் தென்வடக்காகவும் ஐந்து கோடுகள் கிழிக்கவேண்டும். ஆக பதினாறு

கட்டங்களாகும், ஒன்று மூன்று, ஒன்பது பதினொன்று கட்டங்களில், முதல் நான்கு உயிரெழுத்துக்களையும், அப்படியே, ஆறு, எட்டு, பதினான்கு, பதினாறு கட்டடங்களில், மிகுதியான உயிரெழுத்துக்களையும், எழுதி, ககரம் முதலிய மெய்யெழுத்துக்களையும் வர்க்கத்திற்கைந்து ஐந்தாக எழுதவேண்டும். அதாவது வர்க்கத்தின் இரண்டு நான்கு எழுத்துக்களுள்ள கட்டங்களில் ஐந்தாம் எழுத்துக்களையும் எழுதவேண்டும். தன் பெயரின் முதலெழுத்து முதல் ஜெபம் செய்யவேண்டிய மந்திரத்தின் முதலெழுத்து இருக்கும் கட்டம் வரை பிரதக்ஷிணமாக சித்த, சுசித்த சாத்ய, அரி, என்று அறியவேண்டும்.

## மந்திராக்ஷரங்களின் வர்க்கம்.

உ, ஊ, ஓம், க (3) ச (3) ட (3) த (3) ப (3) ல, ள, இவைகள் பார்த்திபங்கள். (பூமியைச்சேர்ந்தவை). ரு, ரூ, ஔ, க, ச, ட, த, ப, ல, ஸ, இவைகள் ஆப்பியங்கள். (தண்ணீரைச் சேர்ந்தவை) இ, ஈ, ஐ, க (2) ச (2) ட (2) த (2) ப (2) ழ, க்ஷ. இவைகள் ஆக்னேயங்கள் (நெருப்பைச் சேர்ந்தவை) அ, ஆ, இ, க, ச, ட, த, ப, ய, ஷ. இவைகள் மாருதங்கள். (காற்றைச் சேர்ந்தவை.) ரு, ரூ, அ, ங, ஞ, ண, ன, ம, ஸ, ஹ. இவைகள் நாபசங்கள் (ஆகாயத்தைச் சேர்ந்தவைகள்) மந்திரத்தை ஜெபம் செய்கிறவனுடைய பெயரின் முதல் எழுத்தும் மந்திரத்தின் முதல் எழுத்தும், ஒரு வர்க்கத்தைச் சேர்ந்ததாகவிருந்தால், ஸ்வகுலம் என்று சொல்லப்படும். பார்த்திவங்களுக்கு, ஆப்பியங்களும் ஆக்னேயங்களும் மாருதங்களும் மித்திரமாம். மாருதங்கள், பார்த்திவங்களுக்கும் ஆப்பியங்களுக்கும் சத்துருவாம். ஆக்னேயங்களுக்கு ஆப்பியங்கள் சத்துருவாம். நாபசங்கள் எல்லாவற்றிற்கும் மித்திரமாம். ஒன்றுக்கொன்று பகையுள்ள எழுத்துக்களை ஆதியிலுடையவனையும் மந்திரங்களையும் சேர்க்கக்கூடாது.

## (8) எழுத்துக்களின் ராசி.

அ ஆ இ ஈ, மேஷம். உ ஊ ரு ரூ, வ்ருஷபம். ளு ளூ, மிதுனம். ஏ ஐ, கடகம். ஓ ஔ, சிம்ஹம். அம் அஹஸ, ஷ ச ஹ ள க்ஷ கன்யா. கவர்க்கம், துலா. சவர்க்கம், விருச்சிகம். டவர்க்கம் தனு. தவர்க்கம் மகரம். பவர்க்கம் கும்பம். யரலவ மீனம். ஜெபம் செய்கிறவனுடைய பெயரின் முதலெழுத்திலிருந்து, கணக்கிடவேண்டும், ஒன்று, ஐந்து, ஒன்பது மித்திரன். இரண்டு, ஆறு, பத்து சேவகர்கள். மூன்று, ஏழு, பரம மித்திரன். பன்னிரண்டு, எட்டு, நான்கு, சத்ரு.

## (9) எழுத்துகளின் நக்ஷத்திரமும் கணமும்

(அ, ஆ, அச்வதி, தேவகணம். இ. பரணி, மனுஷ்ய கணம். ஈ உ ஊ, கார்த்திகை ராக்ஷஸ கணம். ரு ரூ ளு ளூ ரோகிணி, மனுஷ்ய கணம். ஏ மிருகசீர்ஷம், தேவகணம். ஐ, திருவாதிரை, மனுஷ்ய கணம். ஓ ஔ புனர்பூசம், தேவகணம். க, பூசம், தேவகணம். க (2) க (3) ஆயில்யம் ராக்ஷஸகணம். க (4) மகம் ராக்ஷஸ கணம். ச, பூரம் மனுஷ்ய கணம். ச (2) ச (3) உத்திரம் மனுஷ்ய கணம். ச (4) ஞ அஸ்தம் தேவகணம். ட ட (2) சித்திரை ராக்ஷஸகணம். ட (3) ஸ்வாதி தேவகணம். ட (4) ண விசாகம் ராக்ஷஸகணம். த த (2) த (3) அனுஷம் தேவகணம். த (4) கேட்டை ராக்ஷஸகணம். ந ப ப (2) மூலம் ராக்ஷஸ கணம். ப (3) பூராடம் மனுஷ்யகணம். ப (4) உத்தி

ராடம் மனுஷ்ய கணம். ம திருவோணம் தேவகணம். யா அவிட்டம் ராக்ஷஸ கணம். ல சதயம் ராக்ஷஸகணம். வ ச பூரட்டாதி, மனுஷ்யகணம். ஷ ஸ ஹ க்ஷ உத்திரட்டாதி மனுஷ்ய கணம். அம், அஹ, ள, ரேவதி தேவ கணம். ஜெபம் செய்கிறவனுடைய முதலெழுத்திலிருந்து கணக்கிடவேண்டும். இப்பிரகாரம் சோதனை செய்து, குரு, மாணுக்கனுக்கு மந்திர தீக்ஷை செய்யவேண்டும். முறைப்படி தீக்ஷை பெற்று, சுபதினத்தில் மந்திரத்தையும் உபதேசம் பெற்று, ஜெபம் செய்து, தனது சூத்திரத்தில் சொன்னபடி அக்னி வளர்த்து, ஹோமம் செய்து, தர்ப்பணமும், அன்னதானமும் செய்ய, மந்திர பலனை அடைகிறான். ஒரே மந்திரத்தை ஒவ்வொரு விசேஷமான பதார்த்தத்தைச் சேர்த்து, ஹோமம் செய்ய, வெவ்வேறு பலனை யடையலாம். உதாரணமாக மந்திரங்களுக்கெல்லாம் மாதாவான காயித்ரீ என்று வழங்கும் சாவித்ரியைக் கூறுவோம். ஒவ்வொரு நாளும் காலையில் ஸ்நானம் செய்து ஆயிரம் ஜெபிக்க நம்பிய பொருள் கைகூடும். சூரிய க்ரஹண புண்ய காலத்தில் கருங்காலி மரத்தின் சமித்தை நெய் சேர்த்து ஹோமம் செய்ய, பொருளடையலாம். அமாவாசை தினமன்று, காயித்ரீ மந்திரத்தால் ஆயிரம் தர்ப்பணம் செய்ய அசாத்தியமான காரியமெல்லாம் சாத்தியமாகும். பசுக்களைக் கட்டுமிடத்தில், நெய்யுடன் சேர்த்து எருவால் ஹோமம் செய்ய, பசுசமிருத்தியை அடையலாம். அரிசியால். ஹோமம் செய்யப் பெண்களைப் பெறுவான். நெல்லால் ஹோமம் செய்ய இஷ்டமான சந்ததியை அடைகிறான். காயித்ரீ மந்திரத்தைச் சொல்லி அதிகாலையில் கிணற்றிலிருந்து தண்ணீரையெடுத்து எண்ணாயிரம் ஜபித்து அத்தண்ணீரில் ஸ்நானம் செய்தால் கெட்ட கனவுகள் நிவர்த்தியாகும். ஆவின் பாலை மாத்திரம் புசித்து, லக்ஷம் ஜெபிக்க அபிமிருத்தி நேரிடாது. ஆவின் நெய்யை மாத்திரம் புசித்து லக்ஷம் ஜெபிக்க அறுபத்திநான்கு கலாவித்தைகளிலும் தேர்ச்சியடைகிறான். நாபிவரையில் ஜலத்தில் நின்றுகொண்டு லக்ஷம் ஜெபிக்க சக்ரவர்த்தியாகிறான். புரசம்பூவால் ஹோமம் செய்ய அஷ்டைச்வர்யத்தை யடைகிறான். நீர் நொச்சியின் பூவால் ஹோமம்செய்ய, மழை வரும். தேனால் ஹோமம் செய்ய ராஜாவை ஜெயிக்கலாம். பாயஸமும் தேனும் சேர்த்து ஹோமம் செய்ய ஸ்திரீகளையெல்லாம் வசமாக்கலாம்.

லக்ஷம் ஜெபிக்க தனது முன் பிறப்பையெல்லாம் நினைக்கிறான். முழங்கால் வரை தண்ணீரில் நின்று கொண்டு, தனது சத்ருக்கள் வசிக்கும் திசையை நோக்கி கோபத்துடன் ஜெபம் செய்ய யுத்தத்தில் ஜெயிக்கிறான். தீக்ஷணதைலத்துடன் எருக்கின் சமித்துகளால் ஹோமம் செய்ய எழுநாட்களில் சத்ரு இறந்துவிடுவான். சத்ருவின் உருவத்தை பூமியில் வரைந்து அவ்வுருவத்தின் மார்பில் அவன் பெயரையும் எழுதி அதன்மேல் நின்று ஆயிரம் ஜெபிக்க சத்துருநாசமடைவான். இம்மாதிரியான ஆபிசாரப்பிரயோகங்களின், காயித்ரீ என்று வழங்கும், சாவித்ரியை அக்ஷரக்கிரமமாக தலைகீழாகப் படிக்கவேண்டும். இப்பிரயோகம் செய்த பிறகு அஸ்திரத்தை உபஸம்ஹாரம் செய்ய, நெய், பால், பஞ்சகவ்யம், எள்ளு இவற்றின் ஒன்றால் ஹோமம் செய்யவேண்டும். மாவின் இலையால் ஹோமம் செய்ய, எவ்வித ஜ்வரமும் நிவர்த்தியாகும். அத்தியிலை, அரசிலை, இவற்றால் ஹோமம் செய்ய, பசு, குதிரை முதலிய மிருகங்களுக்கு நேரிடும் வியாதி போய்விடும்.

---

## இன்ஷூரன்ஸும் அதன் நன்மைகளும்

சேலம். அ. மாரமரெட்டி.

தற்காலத்தில் இன்ஷூரன்ஸ் (Insurance) முறை வியாபாரத்தின் ஓர் பகுதியாக விளங்கி வருகிறது. இத்தொழில் பெரும்பாலும் கூட்டுறவு முறையில் நடைபெற்று வருகிறது. இன்ஷூரன்ஸ் என்பதற்கு ஒரு சரியான தமிழ் வார்த்தை கொடுத்து பிரசுரிப்பது சிலாக்கியமல்லவென்று தோன்றியபடியால் அது அப்படியே வைத்துக் கொள்ளப்பட்டிருக்கிறது. இது முக்கியமான நான்கு பிரிவுகளால் ஆக்கப்பட்டிருக்கிறது. அவையாவன:—

(1) Life Insurance (வாழ்க்கையைப் பொறுத்தது.)
(2) Fire Insurance (நெருப்பைப் பற்றியது)
(3) Marine Insurance (கடல் சம்பந்தமானது)
(4) Accident Insurance (அகால சம்பவ சம்பந்தமானது)

வாழ்க்கையைப் பொறுத்தது:—

இதில், ஒருவன் தன்னுடைய உயிரை எவ்வளவு தொகைக்கு இன்ஷியூர் செய்யலாம் என்று தீர்மானஞ் செய்துகொண்டு அந்தத் தொகைக்கு ஒரு கம்பெனியில் இன்ஷியூர் செய்யவேண்டியது. மாதா மாதமாவது 6 மாதங்களுக்கொரு தடவையாவது, அல்லது வருடம் ஒரு முறையாவது இன்ஷூரன்ஸ் கட்டணம் (Premium) கம்பெனிக்குக் கொடுக்கவேண்டியது. அவனுடைய ஆயுள் முடிவில் (இளம்பிராயத்திலோ அல்லது வயதுசென்றோ) அவன் எவ்வளவு தொகைக்கு இன்ஷியூர் செய்தானோ அதை மொத்தமாகவோ, வருஷா வருஷம் கொஞ்சம் கொஞ்சமாக சில வருஷங்களிலோ கம்பெனியார்கள் அவனுக்குக் கொடுத்து விடுவார்கள். இதில் இன்னொரு விதம் உண்டு. அதாவது மேற் குறிப்பிட்டபடி கொஞ்ச காலத்திற்கு (10 அல்லது 20 வருஷங்கள்) கட்டணங் கட்டியவுடன், இவன் உயிரோடிருக்கும்போதே மேலே சொன்ன தொகையைப் பெறலாம். மேற்சொன்ன காலத்திற்குள் இவன் ஆயுள் முடிந்துவிட்டாலும் அதைப் பெறலாம். இதற்குத்தான் “என்டோவ்மெண்ட் இன்ஷூரன்ஸ்” (Endowment Insurance) என்று பெயர்.

நெருப்பைப்பற்றியது:—

இது, ஒரு வீடு அதிலுள்ள சாமான்கள் ஆகிய இவற்றின் பந்தோபஸ்துக்கு உபயோகப்படக் கூடியது. வீட்டையுடையோன், தன் வீட்டினுடையவும், அதிலுள்ள சாமான்களினுடையவும் மதிப்பைப் பார்த்துக் கொண்டு, அதே தொகைக்கோ அல்லது குறைந்த தொகைக்கோ, ஒரு வருஷத்திற்காவது, அல்லது 2, 3 வருஷங்களுக்குச் சேர்ந்தாற் போலாவது, ஒரு இன்ஷூரன்ஸ் கம்பெனியில் அவைகளை இன்ஷூரன்ஸ் செய்வான்.

மேற்படி, 1, அல்லது 2, 3 வருஷங்களுக்கு, இவன் கம்பெனியில் கட்டணங் கட்டவேண்டியது. மேலே சொன்ன காலம் முடியுமுன் இவனுடைய வீட்டிற்கு அல்லது அதிலுள்ள சாமான்களுக்குத் தீயினால் ஏதாவது நேரிட்டு, அதனால் இவன் நஷ்டம் அடைந்தால், அந்த நஷ்டம் இன்ஷூரன்ஸ் கம்பெனியைச் சேர்ந்தது. ஆனால் இந்த நஷ்டம், இவன் இன்ஷியூர் செய்த தொகைக்குமேல் போகக்கூடாது. இந்த 2, 3 வருஷங்களுக்குள் இவன் மேலே சொன்னமாதிரி நஷ்டமடைய வில்லையென்றால், இவன் கட்டிய கட்டணம் கம்பெனியைச்சேர்ந்தது. இவனுக்குத் திருப்பிக் கொடுக்கப் படமாட்டாது. அத்துடன், மறுபடியும் ஒரு முறை இவன் இன்ஷியூர் செய்தாலொழிய, இவனுக்கும் கம்பெனிக்கு முள்ள சம்பந்தம் ஒன்றுமில்லை.

கடல் சம்பந்தமானது :—

இது கப்பல்களுக்கும், கடல் மார்க்கமாய் அனுப்பும் சரக்குகளுக்கும், அவைகளினுடைய பந்தோபஸ்திற்காக உபயோக படுத்தக் கூடியது. கப்பலின் சொந்தக்காரன் கொடுக்கவேண்டிய கட்டணங் கொடுத்து அவனுடைய கப்பலை அதனுடைய ஒவ்வொரு பிரயாணத்திற்கு முன்பும் இன்ஷியூர் செய்வது வழக்கம். கப்பல் சமுத்திரத்தில் போய்க்கொண்டிருக்கும் போது புயல் காற்றினாலோ, கப்பல் கொள்ளைக்காரர்களினாலோ, அல்லது வேறு எந்தக் காரணத்தினாலோ, அதற்குக் கெடுதி நேரிட்டு அதனால் அதனை யுடையோன் நஷ்டமடைந்தான் என்றால் அந்த நஷ்டத்தைக் கம்பெனி ஏற்றுக்கொள்ளும். இதுபோலவே, சாமான்களை விற்போர் அல்லது வாங்குவோர் அவைகளைக் கப்பலில் அனுப்புவதற்கு முன் இன்ஷியூர் செய்யவேண்டியது.

அகால சம்பவங்களைப் பொறுத்தது :—

இது நடிகர்களுக்கும் (dancers) மோட்டார் கார்களை யுடையோருக்கும் மிகவும் முக்கியமானது. மேலே நெருப்பின் சம்பந்தமாகச் சொன்னாற் போல், 1 வருஷத்திற்கோ அல்லது அதற்குமேலோ இதிலும் இன்ஷியூர் செய்யவேண்டியது. அந்த காலத்திற்குள் நபர்களுக்குத் தங்களுடைய தொழிலால் தங்களுடைய அவயவங்களுக்கு ஊனம் நேர்ந்து அதனால் உண்டாகும் நஷ்டத்தையும், மோட்டார்கள் முதலியவைகள் ஒன்றோடொன்று தற்செயலாய் மோதியோ வேறெவ்விதத்தாலோ உண்டாகும் ஜன நஷ்டம் பண நஷ்டத்தையும் கம்பெனி ஏற்றுக்கொள்ளும்.

இவைகள் நான்கும் முக்கியமான பெரிய பிரிவுகள். இவை தவிர சில சில்லறை பிரிவுகளும் இருக்கின்றன. அவையாவன, (Life stock Insurance) கால் நடைகள் சம்பந்தமானது, (Fidelity Insurance) ஒரு எஜமானன் தன்னுடைய வேலையாளால் அடையும் நஷ்டத்தை நீக்குவதற்கு, (Burglary Insurance) திருட்டு நஷ்டத்தைப் பொறுத்தது, (Crops Insurance) விவசாயத்தைப் பொறுத்தது, முதலியன.

இதனால் உண்டாகும் நன்மைகளாவன :—

(1) ஒரு மனிதன் ஏற்றுக்கொள்ள வேண்டிய பெரிய நஷ்டத்தைப் பல மனிதர்கள் பங்கிட்டுக் கொள்கிறார்கள். உதாரணமாக, ஒரு வீட்டின் சொந்தக்காரன் தன்னுடைய ரூ. 10,000 பெறுமான வீட்டை அதே தொகைக்கு இன்ஷியூர் செய்திருப்பதாக வைத்துக்கொள்வோம். அவ்வீடு தீப்பற்றி வெந்துவிட்டது. கம்பெனி அவனுக்கு ரூ. 10,000 கொடுக்கிறது. இந்தப் பத்தாயிரம் ரூபாய் கம்பெனிக்கு ஏது என்று கேட்போமாகில், அதனிடத்தில் இன்ஷியூர் செய்திருக்கிற இதர ஜனங்களிடம் கட்டணங்கள் மூலமாய் வாங்கிய தொகையேயாகும். மேற்படி மனிதன் இன்ஷியூர் செய்திரா விட்டால் 10,000 நஷ்டத்தை அவன் தானே அடைந்திருக்க வேண்டும். அதேபோல் இன்னொரு வீட்டினால் ஏற்பட்டதென்றால் வீட்டையுடையோனுக்கு கம்பெனி மூலமாய் நஷ்ட ஈடு கிடைக்கிறது. இது நம்மவர்களில் கல்யாண காலங்களில் அல்லது வேறு விசேஷ காலங்களில் "மொய்" என்று வாங்குகிறார்களே அதை யொத்திருக்கிறது. மானிடர்கள் ஒருவருக்கொருவர் செய்து கொள்ளவேண்டிய உதவிகளில் இதுவும் ஒன்று.

(2) ஒரு வியாபாரஸ்தலத்திற்குச் சுலபமாக முதலையளிக்கிறது. எப்படியெனில், நாம் கட்டணம் மூலமாக இன்ஷூரன்ஸ் கம்பெனிக்குக் கொடுத்திருக்கிற பணத்தை அது பெட்டியில் பூட்டி வைத்திருப்பதில்லை. அன்றூடம் இருப்பதை அது பாங்கியில் போட்டு வைக்கிறது. இந்தப் பாங்கி அந்தப் பணத்தை என்ன செய்கிறது எனில் தனக்கு நம்பிக்கையுள்ளவர் (customers) களுக்குக் கடனாகக் கொடுக்கிறது. இதிலிருந்து நாம் என்ன அறிகிறோம். முதலாளியிடம் பெட்டியில் வீணாய் விழுந்து கிடக்கும் பணம், கையில் இல்லாதவனாகி வியாபாரத்திற்கு அல்லது வேறு நல்ல வழிக்கு முக்கியமாய் வேண்டியவனிடம் போய்ச்சேரவில்லையா? இதனால் உலகத்திற்கே ஒரு பெரிய நன்மையல்லவா?

(3) பணத்தைச் சேர்ப்பதற்கு இது ஒரு தூண்டுதலை ஏற்படுத்துகிறது. எப்படி யெனில் மிகவுங் குறைந்த வரும்படிக்காரர்கள் கூடத் தங்களுடைய சம்பளத்தில் கொஞ்சம் மிகுத்து அதைக் கொண்டு இன்ஷியூர் செய்யலாம். இதனால் பணம் எந்த விதத்திலாவது மிகுத்த வேண்டியிருக்கிறது. பாங்கியில் பணம் போடுவதென்றால் இவர்கள் இஷ்டம்போல் செய்யலாம். ஆனால் இங்கு இவர்கள் பணஞ் சரியாகக் கட்டாவிடில் இவர்கள் முன்னால் கட்டிய பணத்தில் கொஞ்சம் இழக்க வேண்டியதாயிருக்கும்.

(4) இதனால் கவர்ன்மெண்டாருக்கு உண்டாகும் நன்மை பின்வருமாறு:— கவர்ன்மெண்ட் அடிக்கடி பெரிய தொகைகளைக் கடனாகப் பெற வேண்டியிருக்கிறது. ஆகையால் ஒரு தேசத்தில் பெரிய இன்ஷூரன்ஸ் கம்பெனிகள் சில இருந்தால் கவர்ன்மெண்ட் வேண்டும்போது தட்டில்லாமல் அவைகளிடமிருந்து கடன் வாங்கலாமல்லவா?

இவ்வளவு நன்மைகள் இன்ஷூரன்ஸினால் இருந்தும் நாம் (கல்வி யறிவுள்ளவர்களும் கல்வி யறிவில்லாதவர்களும்) அதைச் சரியாய்க் கவனித்துக் கொள்ளாமலிருக்கிறோம். ஆகையால் இனியேலாவது அமெரிக்கா, இங்கிலாந்து முதலிய தேசங்கள் இன்ஷூரன்ஸில் எப்படி முன்னுக்கு வந்திருக்கின்றன என்று பார்த்து நாமும் அதில் மனதைச் செலுத்தி அதனுடைய பல நன்மைகளைப் பெறுவோமாக.

# ஆஸ்திக நாஸ்திக வாதம்

(நாகலட்சுமி அம்மாள்.)

சுவதனு:—ஸகீ ! விமர்சகே ! இதோபார், சூரியபகவான் உதயமாகிறார். ஸகல சராசரங்களுக்கும் க்ஷேமத்தைக் கொடுப்பவர் இவர்தான். வேதஸ்வரூபமான இவரே பிரம்மம். நாம் இவரை நமஸ்கரிப்போம் வா !

விமர்சகா :—அடி சுவதனே ! உனக்கென்ன பைத்தியம் பிடித்து விட்டதா ? உலகமெல்லாம் வாட்டிவாட்டுகிறவனையா நீ வணங்குகிறாய் ! இவன் பூமி முழுவதையும் வரளும்படி செய்கிறான். பயிர், பச்சை. செடி, கொடி, முதலியவைகளைக் காய்ச்சி உலர்த்துகிறான். ஏரி, குளம், வாவி, கூவம், தடாகம் இவைகளின் அழகை அடியோடு கெடுத்துவிடுகிறான். இவ்விதம் குரூரமான இவனிடத்தில் எந்த நற்குண லேசத்தைக்கண்டு நீ நமஸ்கரிக்கிறாய்?

சுவதனு :—ஸகீ ! விமர்சகே ! சூரியபகவானைக்கூடவா நீ நிந்திக்கிறாய் ! இவரிடத்தில் எந்த நற்குணம் இல்லை. கொஞ்சம் கவனமாய்க்கேள். இவர் தம்முடைய கிரணங்களைக்கொண்டு பூமியிலுள்ள தண்ணீரைக் கொஞ்சம் கொஞ்சமாய் எடுத்து ஒன்பது மாதகாலம் தம்கர்ப்பத்தில் வைத்திருந்து அநேகாயிர மடங்கு அதிகமாய் நீரை மழையாக வருஷித்து உலக முழுதையும் சந்தோஷப்படுத்துகிறார். இவர் இல்லாவிட்டால் உலக மெங்கும் இருளால் பாழடைந்துபோகும். இவரில்லாமல் நாம் கண்களைப் படைத்தும் பிரயோஜனமில்லை. வஸ்துக்களைப் பார்க்கும் சக்தியானது நமது கண்களுக்கு இவரால்தான் உண்டாகிறது. மேலும், பிராணிகளின் வியாதியை நீக்கி இவர் ஆரோக்கியத்தைக் கொடுக்கிறார். பலமான எந்தவியாதியும் சூரிய நமஸ்காரம் செய்வதால் சூரியனைக்கண்ட பனிபோல் ஓடிவிடுகிறதல்லவா ? தவிர ஞானிகளுக்கு மோக்ஷமார்க்கத்தைத் தருகிறார். ஏனெனில் முத்தர்கள் சூர்யமண்டலத்தின் வழியாக திவ்வியலோகம் போகிறார்கள். மேலும், சூரியனைக்காணாத தினத்தை துர்தினம் என்று சொல்லுகிறார்கள். எட்டுத் திக்குப் பாலகர்கள் இருந்தபோதிலும், அவர்களில் ஒருவருக்காவது அர்க்யம் கொடாமல் ஜனங்கள் இந்த சூர்ய பகவானுக்கே மூன்று காலங்களிலும் அர்க்யம் கொடுக்கிறார்கள். ஆகையால், மித்திரனும், அகண்டபிரம்மாண்டத்திற்கு ஓர் விளக்காயும் விளங்கும், இவரை யார்தான் தோத்திரம் செய்வதில்லை. ஆகையால், சூரிய மண்டலத்தின் மத்தியில் பிரகாசித்துக்கொண்டிருக்கும், எல்லா நற்குணங்களுக்கும் இருப்பிடமாயுள்ள, பரமாத்மாவான ஸ்ரீமந் நாராயணனை தியானம் செய்வோம். வா.

விமர்சகா :—அடி சுவதனே ! உனக்கு புத்தியில்லை. கருணையில்லாத நாராயணனையும் நீ ஸ்துதிக்க ஆரம்பிக்கிறாயா ?

சுவதனு :—அடி, மஹாபாவி, பரமாத்மாவான ஸ்ரீமந் நாராயணனை நீ கருணையற்றவனென்று எவ்வாறு சொல்லத் துணிந்தாய் ?

விமர்சகா :—அடி சுவதனே ! என்பேரில் கோபித்துக் கொள்ளாதே; நான் பாவியல்ல. உன்னால் தோத்திரம் செய்யப்பட்ட நாராயணன் தான் மஹாபாவி. ஏனெனில், முதலில் தானே உலகத்தை சிருஷ்டித்து, தானே ரக்ஷித்து, பிறகு, ஸம்ஹரிக்கிறான். விஷவிருக்ஷமாயிருந்தாலும், நாம் பயிர்

செய்ததை நாமேவெட்டுவது எவ்வளவு குரூரத்தனம்? நல்ல பழங்களை யுடைய பிரியமான மரத்தை ஒரு பைத்தியக்காரன்கூட வெட்டமாட்டான். வெட்டினாலும் அதைக்குறித்து சந்தோஷப்படவுமாட்டான். அப்படி யிருக்க, போகங்களையும், போக சாதனங்களையுமுடைய ஜகத்தை சிருஷ்டித்துத் தானே அழிப்பது எவ்வளவு தயையைக் காண்பிக்கிறது! தவிர, தன்னுடைய விளையாட்டுக்காக உலகத்தை சிருஷ்டித்து ரக்ஷித்து, பிறகு ஸம்ஹாரிக்கிறான். இவைகள் அவனுக்கு விளையாட்டு, நமக்குத் திண்டாட்டம். மேலும், அவன் பக்ஷபாதி; ஏனெனில், இந்திரன் முதலான தேவர்களை மிகவும் சுகத்திலும், மனிதர் முதலியவர்களை மத்யமாகவும், மிருகம் விருக்ஷம் முதலியவைகளை கஷ்டத்திலும் வைக்கிறான். தேவர்களிடத்தில் அவனுக்குப் பிரியமும், மிருகம், விருக்ஷங்களிடத்தில் அவனுக்கு வெறுப்பும் இருக்கின்றனவல்லவா? விருப்பும், வெறுப்பும் உள்ளவனை நாம் எப்படி தோத்திரம் செய்வது? மேலும், துஷ்டர்கள் கூட செய்யாத குரூரமான காரியத்தை இவன் செய்கிறான். எல்லாப் பிராணிகளிடத்திலும் அந்தர்யாமியாய் இருந்து கொண்டு, ஒவ்வொரு கெட்ட காரியத்தையும் செய்ய ஏவுகிறான். அவனால் ஏவப்பட்டு நாம் கெட்ட காரியம் செய்தபிறகு கோபங்கொண்டு நம்மை நரகத்தில் விழும்படி செய்கிறான். இவ்வித நடவடிக்கையுள்ள நாராயணனை மஹா குரூரனென்றும், நிந்திக்கத் தக்கவனென்றும் ஏன் சொல்லக்கூடாது?

சுவதனா :—அடி, அறிவில்லாதவளே! கருணா சமுத்திரனான ஸ்ரீமந் நாராயணனையும் நீ நிந்திக்க ஆரம்பிக்கிறாயா? இந்த சம்சார சமுத்திரத்தில் முழுகிக்கிடக்கும் பிராணிகளை அவர்தாமே கரையேற்றி துர்லபமாகிய தம்முடைய பதத்தை அடையச்செய்கிறார். திரௌபதி, பிரஹலாதன், குகன், சுக்கிரீவன், காகாசுரன், விபீஷணன், கஜராஜன் முதலியவர்களின் சமாசாரத்தை நீ அறியவில்லை. உலகத்தில் புத்தியில்லாதவர்கள் அல்லவோ தங்கள் குற்றத்தைப்பாராமல் பாடுபட்டுப் பிறரிடத்தில் குற்றம் காண்கிறார்கள். ஒரு திருஷ்டாந்தம் பார். ஒரு தகப்பன் தன் புத்திரனிடத்தில் உன் சத்ருக்களைக் கொன்றுவா என்று ஒரு கத்தியைக்கொடுக்க, அவன் அந்தக் கத்தியால் தன் கழுத்தையே அறுத்துக்கொண்டால் அது தகப்பனுடைய குற்றமோ புத்திரனுடைய குற்றமோ? பரமதயாளுவான சர்வேஸ்வரன் தன்ஸ்வரூபத்தையும், இது தர்மம், இது அதர்மம், என்பதையும் அறிவதற்கு வேதசாஸ்திரங்களையும், பகவானாகிய தன்னை ஆராதிப்பதற்கு சரீரத்தையும், தியானம் செய்வதற்கு மனசையும், நல்லபுத்தி உண்டாவதற்கு கங்கை முதலிய தீர்த்தங்களையும், ஆலயங்களையும், தத்வஞானம் உபதேசிப்பதற்கு சத்குருக்களையும் நமக்குக் கொடுத்து நம்மை அனுக்கிரகிக்கிறார் அல்லவா! அப்படியிருக்க, இந்த சம்சாரத்தில் சுழன்று நின்றால் அது நமது தோஷமல்லவா? பிராணிகளின் முன் கர்மத்தை அனுசரித்து அல்லவோ வித்யாசமான சிருஷ்டி ஏற்படுகிறது? இந்த பேதசிருஷ்டி நாராயணனுடைய துர்எண்ணத்தால் உண்டாவதல்ல. அவர் மேகம்போல் எல்லாவற்றிற்கும் பொதுவாயிருக்கிறார்.

விமர் :—அடி சுவதனே! எப்படி மேகம்போல் பொதுவாயிருக்கிறார்?

சுவதனா :—சொல்லுகிறேன் கேள். நெல் முதலிய பயிர்களின் விளைவுக்கு மேகம் பொதுவான காரணம். அந்தந்த பயிர்களின் வித்தியாசமானது

அந்தந்த தானியங்களிலுள்ள விசேஷகாரணத்தால் உண்டாகிறது. அது போல் பிராணிகள் செய்த நல்லகருமத்தையும், கெட்டகருமத்தையும் அனுஸரித்து பகவான் பலனைக்கொடுக்கிறார். ஆனால், தன் இஷ்டம்போல் ஒருவனுக்கு நல்லபலனையும், மற்றொருவனுக்கு கெட்ட பலனையும் கெடுப்பதில்லை. ஆகையால், சர்வேஸ்வரனை பக்ஷபாதி யென்றும், கருணையில்லாதவன் என்றும் சொல்லக் கூடாது.

விமர்சகா :—அடி, சுவதனே! நீ சொல்லுகிறபடி நாராயணன் பரம காருணியனாய் இருக்கும் பக்ஷத்தில் இதுவரையில் ஜீவன்களை கவனித்து ஏன் அனுக்கிரகிக்கவில்லை?

சுவதனா :—அனாதியான கர்மத்தினால் ஜீவன் ஸம்ஸாரத்தில் மூழ்கியிருக்கிறான். அவன் ஈஸ்வரனால் தக்ககாலத்தில் கரையேற்றப் படுகிறான்.

விமர்சகா :—இது வரையில் அனாதியாயிருந்து சென்ற காலத்தில் கிடைக்காத மோக்ஷம், இனிமேல் ஜீவனுக்கு யாரால் எவ்விதம் கிடைக்கும்?

சுவதனா :—நாம் நல்ல கருமங்களைச்செய்து வந்தால் அவைகளின் பலனை நமக்குக்கொடுக்கும் காலத்தில் ஈஸ்வரனுக்கு கிருபையுண்டாகும். அப்போது அவன் நமக்கு மோக்ஷத்தையுங் கொடுக்கிறான்.

விமர்சகா :—அடி, சுவதனே! அந்த நல்லகருமங்களெவை?

சுவதனா:—சத்சங்கம்செய்து ஸம்ஸாரத்தில் வைராக்கியத்தை அடைந்து மோக்ஷத்தை விரும்பி சத்குருவை ஆச்ரயித்து தத்துவஞானம் அடைந்து பக்தி முதலிய உபாயங்களைக் கைக்கொண்டு பகவானுக்கு திருப்திகரமான கர்மங்களைப் பலனை அபேக்ஷியாமல் செய்துகொண்டு வந்தால், மரண காலத்தில் ஈஸ்வரனுடைய தயையாலேயே ஜீவன் எந்தெந்த சுபாவங்களை நினைத்துக்கொண்டு தன்தேகத்தை விடுகிறானோ அந்த சுபாவத்தையே மரணத்துக்குப்பிறகு அடைகிறான் என்று பகவான் சாஸ்திரங்கள் மூலமாக அறிவித்திருக்கிறான்.

விமர்சகா :—ஆம், மோக்ஷத்தை அடைந்தபிறகு ஜீவன் ஸம்ஸாரத்திற்கு திரும்பி வருவானோ?

சுவதனா :—இல்லை. திரும்பிவருவதில்லை.

விமர்சகா :—மிகவும் துக்கப்பட்டுக்கொண் டிருக்கும் ஜீவனுக்கு மோக்ஷம் உண்டென்பதும், அதை அடைந்தபிறகு ஸம்ஸாரத்திற்கு அவன் திரும்புவதில்லை யென்பதும், அழுகிற குழந்தைகளுக்கு தற்காலம் திருப்திக்காக ருசிகாட்டும் பொய்வார்த்தைகளுக்கு ஒப்பானவையென்று நினைக்கிறேன்.

சுவதனா :—அடிவிமர்சகே! இந்த விஷயத்தில் நீ சந்தேகப் படாதே. நமது தாய் தந்தைகளைக் காட்டிலும் அநேகமாயிர மடங்கு அதிகமாக நமக்கு நன்மையை உபதேசிக்கும் வேதமானது எக்காலத்திலும் பொய் சொல்லாது. பரப்பிரம்மம், பாதத்ரமுண்டென்று கூறுவது எப்படி உண்மையோ அப்படியே வாழ்நாள் முழுதும் துக்கியாயிருக்கும் ஜீவன் ஒரு காலத்தில் பகவானால் திருத்தப்பெற்று பிரமலோகம் அடைகிறான், மறுபடியும் அவன் திரும்பிவருவதில்லை என்பதும் உண்மையே. ஆகையால், அந்த பகவானாகிய ஸ்ரீமந் நாராயணனைத் தியானம் செய்வோம் வா.

---

# விநாயக முகூர்த்தம்.

இ. ச. சிவராமலிங்கம் பிள்ளை, விஜயபுரம்.

## கணேசர் துதி.

அகரமென அறிவாகி உலகமெங்கும்
அமர்ந்து அகர உகர மகரங்கள் தம்மால்
பகரும் ஒரு முதலாகி வேறுமாகிப்
பல்வேறு திருமேனி தரித்துக்கொண்டு
புகரில் பொருள் நான்கினையும் இடர்தீர்ந் தெய்தப்
போற்றுநர்க்கு அறக்கருணை புரிந்தெல்லோர்க்கும்
நிகரில் அருள் சுரந்து உலகம் தன்னைக்காக்கும்
நிருமலனைக் கணபதியை நினைந்து வாழ்வாம்.

ஆனைமுகன் ஆறுமுகன் அம்பிகை பொன்னம்பலவன்
ஞானகுரு வாணியை உள்நாடு.

கன்னியாகுமரிமுதல் இமயவரை யாண்டு சென்றாலும் நமது பாத நாடு முழுதும் இந்துமக்களின் ஆராதனைக்கு முதற்றெய்வமாக விளங்குவது விநாயக முகூர்த்தமேயாகும். சிவன் கோவில்களிலும் விஷ்ணுகோவில்களிலும் பெருமாள் கோவில்களிலும் தண்ணீர்த்துறைகளிலும், மரத்தடிகளிலும், வீதிகள்தோறும், கிராமங்களின் முகப்பிலும் இன்னும் இதுபோன்ற முக்கிய இடங்களிலும் இம்மூர்த்தியைக் காணலாம். இம் முகூர்த்தத்தை கற்களாலும் உலோகங்களாலும் மரங்களாலும் விக்கிரகங்களாகவும், மா, மண், சாணம் மஞ்சள் முதலியவைகளால் லிங்கவடிவமாகவும் அமைக்கப்பெற்று வணங்கப்பெற்று வருகிறது.

இந்து நன்மக்கள் எந்தக்காரியத்தைத் தொடங்கினாலும் முதலில் விநாயகரை வணங்குவது வழக்கம். அதை அநுசரித்து, நாமும் நமது ஆனந்த போதினி மாதப்பத்திரிகையைத் துவக்கும்போது அவரை வணக்கஞ்செய்து, அவருடைய தத்துவங்களைப்பற்றிச் சிறிது ஆராய்ந்து அவருடைய உண்மைகளை வெளிப்படுத்துவோம்.

விநாயகரைப் பற்றிய விரிந்த தத்துவங்களை யெல்லாம் ஆராய்ந்து கொண்டுபோக இப்பொழுது உத்தேசிக்கவில்லை. ஆயினும் இந்து மதத்தின் உண்மைகளை அறியார்பலர் அவருடைய பிறப்பைப்பற்றி புராணங்களில் கூறியவற்றை ஆபாசமாகப் பொருள்கற்பித்தும் அவருடைய சொரூபத்தின் தத்துவங்களை உணர ஆற்றலற்றவர்களாக தத்தமக்குத் தோன்றியவாறெல்லாம் கூறிக்கொண்டு வருவதால் தற்கால இளைஞர்கள் தெய்வபக்தி குன்றினவர்களாய் விட்டார்கள். அது அவர்கள்மேல் பிசகில்லை. அதன் உண்மையை உணர்த்துவதற்குப் போதிய சாதனங்களில்லாத குறையேயாகும். சில பத்திரிகைகள்கூட இம்மாதிரி தத்துவ உண்மைகளை ஆராய்வதற்கு இடங்கொடாததால் அவைகளை உணர்ந்த முன்வருதுள்ளவர்களும் வேறு வகையில் இடம் பொருள் ஏவலின்றித் தவிக்கின்றனர். ஆகையால் ஆனந்தபோதினி வாயிலாக சிலவற்றைக்கூறி அக்குறையையும் நீக்கலாமென்று கருதுகிறோம். சமயம் வாய்ந்தபோது இதர அம்சங்களையும் ஆராய்வோம்.

"தத்துவம் எங்குண்டு தத்துவன் அங்குண்டு, தத்துவம் எங்கில்லை தத்துவன் அங்கில்லை, தத்துவஞானத்தின் தன்மை அறிந்தபின், தத்துவன் அங்கே தலைப்படுவான் தானே" என்று திருமூலர் கூறியுள்ளார். விநாயகப் பெருமானுக்கு, நாமங்கள் அனந்தம். அவைகள் ஒவ்வொன்றிற்கும், காரணங்களும் செயல்களும் புராணங்களில் கூறப்பட்டிருக்கின்றன. விநாயகர் புராணமென்ற தனிப்புராணம் ஒன்றுமுள்ளது. அவைகள் ஒவ்வொன்றுக்கும் காரணகாரியங்கள் கூறலாம். அவைகளையும் இப்போது தொடங்கல் உசிதமில்லை.

அவருடைய உருவம் யானைமுகம் போன்றதென்பது எவரும் அறிந்த தொன்று. விநாயகருக்கு 'பிரணவப் பொருள்' என்று பெயருண்டு. பிரபஞ்சமானது "ஓம்" என்ற பிரணவப்பொருளினின்று அகண்டமாயுள்ளது. என்று உபநிடதம் சொல்லுகின்றது. யானைமுகமென்பது, பிரணவ வடிவமாகும் வேதங்கள்கூறும் வாசக இலக்கணமான பிரம்மம். இப்பிரபஞ்சவியக்தத்துள் அப்பிரணவமே ஆதிநாதமாகும். அவ்வேகாக்ஷர ஆதாரத்தைக் கொண்டே வேதங்கள் பிரகாசிக்கின்றன; அப்பிரணவத்தின் அவ்வியக்த பிராண சக்தியினின்றே பஞ்சபூதங்களும், அவற்றின் பரிணாமமாகிய அண்டகோடிகளும் ஜீவகோடிகளும் பிரதிபலிக்கின்றன. அண்டகோடிகளை அடக்கிக் கொண்டிருக்கும் அறிகுறியாக உருண்டு திரண்டு செறிந்த தொந்தியும், இன்னோரன்ன பரமார்த்திக தத்துவங்கள் நிறைந்து வாய்ந்த உருவகமுமுள்ள முகூர்த்தமாக விளங்கி அன்பர்கட்குக் காட்சியளிக்கின்றார்.

பூலோகத்தில் நமது புறக்கண்ணால் காணக்கூடிய சகலதோற்றங்களும் அகக்கண்ணால் காணக்கூடியவைகளும், கடவுளின் தோற்றம் என்றும் அவைகளில் குறைந்த உண்மைகளும் நிறைந்த உண்மைகளும் கடவுளின் உணர்ச்சிப் பாகு பாடுகள் என்றும் ஏற்படும் பொழுதும், அத்தோற்றங்களிலும் அவ்வுணர்ச்சிகளிலும் வேற்றுமைகளும் விபரீத ரூபங்களும் இயற்கையாயிருக்கின்றபோதும் விநாயகப்பெருமானின் உருவகம் என்று கூறத்துணியலாமோ? அன்பர்கள் நன்கு சிந்திப்பார்களாக.

ஆனைகள் ஐந்தும் அடக்கி அறிவென்னும்
ஞானத் திரியைக் கொளுவி அதனுள்புக்கு
ஊனை இருள் அறநோக்கும் ஒருவருக்கு
வான் அகம் ஏற வழி எளி தாமே.

என்று திருமூலர் மனதின் தொடர்ந்த இந்திரியங்களை ஆனை என்று சொல்லுகிறார். ஆதலால் மனதிற்கும் ஆனைக்கும் ஒரு ஒற்றுமையான உணர்வுண்டு. மனது என்ற தத்துவ இருப்புக்கு நமது மண்டையில் யானை மத்தகம் என்ற இரண்டு மூளைகளும் அதன் மத்தியில் கீழ்நோக்காய் தொங்கும் ஓர் நரம்பும் யானைமுகத்தை ஒத்ததாய் அமைந்திருக்கிறது. எதையும் முதலில் நினைக்கும் மனத்தின் இருப்பிடம் அவ்வாறு அமைந்திருப்பதால் முதற்றெய்வமாய் வணங்கக்கூடிய விநாயக உருவகமும் அவ்வாறு அமைந்துளது. அண்டத்திலுள்ளது பிண்டத்திலும் என்ற தத்துவம் இதில் நன்கு புலனாகின்றது.

உலகம் இன்று நேற்றுத் தோன்றியதல்ல. அதன்முடிவை ஆராய மனிதஆயுள் போதாது. எத்தனையோ மன்வந்திரங்கள் யுகப்பிரளயங்கள் ஏற்பட்டுள்ளன. ஜீவகோடிகளின் பரம்பராவாசனைகளில் தோன்றும் ஜென்

மங்களில் எத்தனையோ மாறுபாடுகள் விளைந்துகொண் டிருக்கின்றன. இது கால் ஆங்கிலேயர்களுடைய ஆராய்ச்சிகள், முன் நம்நாட்டில் இருந்து மறைந்த பல உண்மைகளுக்கு அணிகலனு யிருக்கின்றன. இன்னும் நம் முன்னோர்கள் கண்ட சூக்ஷமநிலையில் ஆராய்ச்சிகள் எய்தப்படவில்லை. தூலக்கருவிகளாலேயே ஆராயப்படுகின்றன. இத்தனை மாறுதல்களில் அநந்த மன்வந்திரங்களிலும் யுகப்பிரளயங்களிலும் விநாயக உபாசனைத் தெய்வத்தின் உற்பவங்களும் பலதிறப்பட்டதா யிருப்பதில் என்ன ஆச்சரியம்! அவைகளில் அன்பர்கள் வீண்காலம் போக்குவது முதலிய ஆபாசகற்பனைகளை விட்டுவிட்டு உண்மைகாண முயலவேண்டும். அவ்வாறு காண ஆங்கிலேயர்கள் கையாள்வதுபற்றி திருப்தி யடையவேண்டும்.

சகுணமாய் உபாசிக்கும் பக்தர்களுக்கு இதைவிட இன்னும் புராணங்களில் பல இலக்கணங்கள் சொல்லப்பட்டிருக்கின்றன. ஞானிகளுக்கு சகுண சொரூபம் நிர்க்குண நிலையில் நிர்விகற்பமாய் தத்துவங் கடந்ததாய் இருக்கின்றது. யோகிகளுக்குத் தியானிக்கப்படும் சுகமாய் உலககாரணமாய் குண்டலியாய் சுயஞ்சோதியாய் சோர்விலா சாத்வீக நிலையாய் சதா நிட்டையருள் கணேசராய் விளங்கிக்கொண்டிருக்கிறார்.

## தியானம்

விநாயக முகூர்த்தத்தை பிரத்தியட்சப் படுத்தி அடைவதற்கு சில மந்திரங்களும் பெரியோர்களால் வகுக்கப்பட்டிருக்கின்றன. மந்திரங்கள் என்பது சில தெய்வீகமொழிகள். தெய்வாம்சமுள்ள முகூர்த்தங்களை பரிசுத்தமான நிலையங்களில் ஸ்தூலமாகவோ சூட்சுமமாகவோ பிரதிஷ்டை செய்து சில நியமங்களுக்குட்பட்டு அத்தெய்வீக மொழிகளை உச்சரிக்கவேண்டும். இக்காலத்திலும் அவ்வித உச்சரிப்பால் சித்திகள் அடைந்தவர்களுளர். ஆனால் அது பூரணமாயில்லை. அதற்குக்காரணம் உச்சரிக்கப்படும் அட்சரங்களின் வாக்கியக் கர்த்தாவாகிய விநாயகக் கடவுளின் தெய்வாம்சஉண்மை நிலையை சரிவர உணராது அட்சரம் உச்சரிக்கப்படுவதேயாகும். அன்றியும் அவர்கள் கணேசனை அட்சர தியானஞ்செய்து கிடைத்த சக்திகளை இழிவான காரியங்களில் உபயோகப்படுத்தி பொருள்திரட்ட எண்ணங்கொண்டு செய்பவர்கள். ஆதலால் பூரணசித்தியை யடைவதற்கில்லை. அட்சரதியான மந்திரங்களின் விசேடப்பயன் யாதெனில் பிராரப்த ஆகாமியப் பிரதிபந்தங்கள் நசித்துச் சாரூப பதவியை யடைவதற்காகும்.

உண்மையில் மனிதனுடைய சக்திக்கு எல்லையில்லை. மனித சக்தியும் மந்திரசக்தியும் மிகவும் அபாரமானது. (அவைகளைப்பற்றி 'ஆனந்த போதினி'யில் தனிக்கட்டுரையாக எழுதிவிளக்கலாம்) அட்சரத்தியானத்தால் பரிசுத்த தெய்வீக சக்திகளை ஆத்மார்த்தச் சிந்தனையுடனும் பயன் கருதாமலும் பாமரர்களுக்கும் அதிலும் தாழ்வுற்ற பஞ்சமர்களுக்கும் அளிக்கவேண்டும். அட்சரத்தியானத்தால் விநாயகக் கடவுளின் தன்வயமாகவும் மயமாகவும் அடைந்த மந்திரதிருஷ்டர்கள் எளியவர்களுடைய பிரபந்தங்களை நிவர்த்திப்பதால் தங்களது சுயநிலையும் அவர்களது சுயநிலையும் ஐக்கியமுற்று தெய்வாம்ஸமானது முற்றும் பிரதிபலிக்கும் தன்மைகள் வாய்க்கும். பொருளையோ கீர்த்தியையோ விரும்பி இச்சக்திகளை இதரர்களுக்கு விநியோகிப்பதால் மந்திர அப்பியாச பிரயத்தினத்தால் கிடைத்த தெய்வாமிசக்களஞ்சியம் வெறுந்திடலாவதுடன் புதிய பிரபந்தங்களுக்கும் ஆளாகிறார்கள். (தொடரும்.)

## பொருளுடைமை.

அரசைக்கிழார். ராம சுப்பிரமணிய நாவலர்.

'அறம்பொருள் இன்பம் வீடு' என ஆன்றோராற் கூறப்பட்ட உறுதிப் பொருணன்கனுள் அறனும் இன்பமும் எய்துதற்கண் பொருளினது இன்றியமையாமை கருதிப் பொருள் அவ்விரண்டிற்கு நடுவே வைக்கப்பட்டது. இதனுள் இவ்வுலகியற் பொருளினது இன்றியமையாமை அறிவுடையோராற் பேணப்படும். பொருள் பெற்றுளொருவன் வினை உலகியற் பொருட்களெல்லாவற்றையும் அப்பொருளினாலே அடையுந் தன்மை நோக்கிச் செல்வப்பொருட்குப் பொருள் என்று பெயர் பொறித்தனர் முன்னையோர். பொருள் அழிவுடைத்தாயினும் அது தங்கியிருக்குங்காறும் புகழையும் உதவியையும் நுகர்ச்சியையும் கொடுத்தலான் அது ஈண்டு மிக்க சிறப்பிற்றாயிற்று. உலகிற் பிறந்தார் பொருளிலராயின் பிறரை எதிர்நோக்கி அவர் கைப்பொருள் கொண்டே வாழவேண்டியிருத்தலான் அவர்க்கு இழிவுடை வாழ்க்கை யெய்துதல்திண்ணம். இரவலர் தாமும் பிறரது பொருள் கொண்டு வாழ்தலினானே இழிவுடையராயினர். அவரும் பொருளுடையராயின் அத்தகைய இழிவு நேராதென்பதும் உலகினர் அவரைப்போற்றுவாரென்பதும் எவராலும் மறுக்கொணாதன. பொருளில்லார் இன்ப நுகர்ச்சி யெய்தாது மிகவும் துன்புற்று வாழ்வதும் பொருளுடையார் இன்ப நுகர்ச்சியெய்தி வாழ்தலும் கண்கூடாய் யாவரானும் அறியப்பட்டன. "பொருளுடையான் கண்ணதே போகம்."

பொருளில்லார் என்றும் அடிமையாகி வாழ்தலால் இவ்வுலகிற் பிறந்தும் பிறந்த பயனெய்தாமையான் பிறவாதாரோ டொத்தலின் "பொருளில்லார்க் கிவ்வுலகமில்லை" என்றனர் முதுக்குறையாளர்.

> "அருளிலார்க் கவ்வுலகமில்லை பொருளிலார்க்
> கிவ்வுலக மில்லா கியாங்கு"

என்னும் குறளால் இவ்வுலகிற் பொருளினது இன்றி யமையாமை எத்துணைத் தென்பது பெறப்படும்.

உலகிற் பொருளுடையார் உலகியலின்பம் முற்று மெய்தி இன்பவாழ்க்கையராய்ப் பிறர் மதிக்க வாழ்கின்றனர். அரசனுக்கும் புகழும் அதிகாரமும் கை கூடியது பொருளுடைமையானன்றோ? அரசன் ஓர் கால் ஆண்டியாயின் அவனை இவ்வுலகில் யாரே மதிப்பர்? அவனுக்கு புகழ் ஏனென்னே? ஆகலாற் பொருளுடையாரே இவ்வுலகிற் பொருளுடையார். இக்கருத்துப் பற்றியன்றே பெரு நாவலரும்,

"பொருளல் லவரைப் பொருளாகச் செய்யும்
பொருளல்ல தில்லை பொருள்"

என்றருள்வாராயினர். இதனன் கல்வி அறிவு ஒழுக்கங்களால் மதிப்பெய்து தற்குரியரல்லதாரும் பொருளுடைமையால் பிறர் மதிப்பை அடைவர் என்பது பெறப்பட்டது.

இன்ப நுகர்ச்சி யடைதற்குரிய நல்வினை செய்துள்ளவர்களே இவ்வுலகிற் பொருள் பெற்று அதனன் வாழ்வாரன்றிப் பிறர் வாழார். பொருளுடையார் மேலும் பொருளுடையராக வேண்டின் தமக்குற்ற பொருள் கொண்டே அறஞ்செய்தல் வேண்டும். அங்ஙனம் அறம்புரியாதார் பின்னர் வறுமையுற்றுத் தாம் பொருளுடையராயிருந்த காலத்துத் தம்மடத்து ஏற்ற இரவலரது அகத்தின் முன்னர்ச் சென்று அவரை நோக்கிக் கை நீட்டி ஏற்கவும் கூடும். அதனன், பொருளுடையார் தமது தற்கால வாழ்க்கையைக் கருதி இறுமாந்திருத்தல் பெருந்தீதாய் முடியும். பொருள் பெற்றபின் சிலர் தமது பழைய நடபு, ஒழுக்கம், இயல்பு முதலியவற்றினின்றும் நீங்கி மிக்க செருக்குற்று வாழத்தொடங்குகின்றனர். பழைய நட்பினரைக் காணினும் அவர் உரையாடார்; காணுதார் போலவே கழிவர். பிறர் அடிபணிந்து எத்துணை தான் கூறினும் தாம் கேளாதாராய் முகத்தைத் திருப்பி இறுமாப்புக்கொள்ளுவர். பிறரை ஏளனம் செய்வர்.

"சிறியரே மதிக்கு மிந்தச் செல்வம்வந் துற்ற ஞான்றே
வறியடன் செருக்கு மூடி வாயுள்ளார் மூக ராவர்
பறியணி செவியு ளாரும் பயிறரு செவிட ராவர்
குறிபெறு கண்ணு ளாரும் குருடராய் முடிவ ரன்றே"

என்னும் செய்யுள் கண்டாராய்க.

இத்தகைய இயல்புகளெல்லாம் எழுவதற்குக் காரணம் அவர் தம் பொருளேயன்றிப் பிறிதன்று. பொருள் பெற்றஞான்று இத்தகைய செருக்கினைக் கொள்வார் பின்னர் அப்பொருளானே அழிவுறுவர் என்பது உணரத்தக்கது. பொருளும் நிலைதலுறவேண்டின் அது நன்னெறியானீட்டப் பெற்றதாயிருத்தல்வேண்டும். இன்றேல் அப்பொருள்தான் சேர்ந்த நெறிகளினு மேற்பட்ட நெறிகளூடே வெளியேறிவிடும்.

பொருள் நன்னெறியாற் சேர்க்கப்பெற்றதாயினும் ஊழ் மாறுகொள்ளுமிடத்து அப்பொருளும் அழியும்.

"வகுத்தான் வகுத்த வகையல்லாற் கோடி
தொகுத்தார்க்குந் துய்த்த லரிது.

ஆதலால் பொருளிருக்குங் காலத்தே அறஞ்செய்து மேன்மேலும் அப்பொருளை நுகர்தற் பொருட்டு முயல்வதே அறிவோர் கடனும். அப்பொருளான் அறனுமின்பமும் தொடர்பாக வெய்திவரவே, அவற்றில் வெறுப்புண்டாய் வீடுபேறு கருதி உழைத்தல் எளிதாய் முடிதலின் அன்னர் பின்னர் வீடுபேற்றையும் அடைவரென்பதாம்.

"அத்திட்ட கூறை அரைச்சுற்றி வாழினும்
பத்தெட் டுடைமை பலருள்ளும் பாடெய்தும்"

# வாய்மை

S. K. சக்கரபாணி நாயுடு.

வாய்மை என்பது வாயின் தன்மை எனப் பொருள்படும். வாய்மையும் மெய்மையும் ஒரு பொருட் சொற்கள் மெய்மை யெனினும், உண்மை யெனினும் பொருந்தும். வடமொழிச் சொற்களாய நிஜம் சத்தியம் என்பன இதே பொருளை உடையனவே. வாய்மை யெனின் உண்மை பேசல் எனலாகும். பிறருக்குத் தீமையைத் தராத சொற்களைச் சொல்லுதலே உண்மை. உள்ளதை உள்ளவாறு கூறல் வேண்டும். அவ்வாறு கூறுங்காலத்தும் உலகுக்கோ பிறர்க்கோ கேடு தருமாயின் அது வாய்மை எனப்படாது. இன்னும் உண்மைக்கு மாறாக ஒன்றைக் கூறுமிடத்து யார்க்கும் எத்தகைய தீங்கையும் விளைவிக்காது நன்மைகளையே தருமாயின் அதுவும் வாய்மை யெனக் கருதப் படும். இதனை,

"பொய்ம்மையும் வாய்மை யிடத்த புரைதீர்ந்த
நன்மை பயக்கு மெனின்

என ஆசிரியர் திருவள்ளுவ நாயனர் கூறியருளினர். இதனையே வில்லி புத்தூராழ்வாரும்,

"உம்மையின் மறுமைதன்னி லுறுபய னிரண்டும் பார்க்கின்
இம்மையில் விளங்கும் யார்க்கும் அவரவர் இயற்கையாலே
மெய்மையே யொருவர்க்குற்ற விபத்தினை மீட்டுமாயிற்,
பொய்ம்மையு மெய்மைபோலப் புண்ணியம் பயக்கு மன்றே"

எனத் திருவாய் மலர்ந்தார்.

ஒருவன் தான் பொய்யென்று அறிந்த ஒன்றை மற்றவர்களுக்கு மெய் போலச் சொன்னல் அவன் மனமே அவனைச் சுடுகின்றது. அவன் கூறியது வாய்மை யன்றெனை நன்கறிந்த அவன் நெஞ்சே அக்கேடான செய்கைக்குத் துணைநின்று துன்பத்தைத் தரும். பொய்மை கூறுகின்றவன் கடவுள்பால் அஞ்சி நடப்பவனல்லன்; ஆனல் மனிதர்பாலே அஞ்சுகின்றான். இதை ஏற்ப பிரஞ்சுக் கட்டுரையாளர் (French essayist) மான்டேன் (Montaigne) மிகவும் வேடிக்கையாய்க் கூறியுள்ளார்.

'If it be well weighed, to say that a man lieth, is as much as to say, that he is brave towards God, and a coward towards men, for a lie faces God, and shrinks from man.

அதாவது, "பொய்மை புரைக்க ஒருவன் மனிதனிடத்தில் பயந்து கடவுளை எதிர்க்கிறான்" என்றார். பொய்மை எக்காலத்தும் மறைவு படாதா

தலால் அதனை அறவே நீக்கவேண்டும். வாய்மையானது மக்கட்கு ஓர் ஒப் பற்ற அணிகல மெனலாம். இது சிற்றுயிர்க்குற்ற சிறப்பான துணைகளில் ஒன்று. இதனை ஆங்கில ஆசிரியர் பேக்கனார் (Bacon) என்பாரும் 'மக்கள் இயல்பில் உண்மையே உயர்ந்த நலம்'

("Truth is the sovereign good of human nature") எனக் கூறியுள்ளார். வாய்மை யுள்ளவன் எக்காலத்தும் உயர்ந்தோர் உள்ளங்களி விருப்பான். பொய்யாத உள்ள முடையோன் உலகத்தின் திலகமாகக் கருதப்படுவான். ஒருவன் தன் மனத்தோடு பொருந்த உண்மையைச் சொல்லுவானாயின் தவம், தானம் முதலியன செய்பவரினும் மேலாகச் சிறப்பைப் பெறுவான். பொய்யாமையே எல்லா அறங்களிலும் சிறந்த அறமாகும். இதனைத் தெய் வத் திருவள்ளுவரும்,

"பொய்யாமை பொய்யாமை யாற்றி னறம்பிற
செய்யாமை செய்யாமை நன்று"

"யாமெய்யாக் கண்டவற்று ளில்லை யெனைத் தொன்றும்
வாய்மையினல்ல பிற"

எனத் திருவாய் மலர்ந்தருளி யுள்ளார். இஃது பொய்யாமையை பொய்யாமற் செய்யிற் பிறவறஞ் செய்யாமை நன்று என்றும், பொய் கூறின் பிறவறஞ் செய்கை நன்றாகா தென்றும், வாய்மை யில்லார் எவ்வளவு அறங்கள் புரி யினும் அவை பயனிலா தொழியும் என்றும் பொருள்படும். மனிதர் மறை முழுதுணர்ந்தாலும், பல யாகங்கள் புரிந்தாலும், 'தானங்கள் செய்திடினும், அநேக தீர்த்த யாத்திரைகள் போயினும் ஒரு பொய் சொல்வரேல் கடு நரகத் தில் அழுந்தி விடுவரென்பதைக் காசிரகசியச் செய்யுளால் அறிகிறோம்.

இளங்கோவடிகள் "பொய்யுரை அஞ்சுமின்" என்றனர். சிறு பஞ்சமூல முடையாரும்,

"இம்மை நலனழிக்கும் எச்சங் குறை படுக்கும்
அம்மை யருநரகத் தாழ்விக்கு—மெய்ம்மை
அறந்தேயும் பின்னும் அலர்மகளை நீக்கும்
மறந்தேயும் பொய்யுரைக்கும் வாய் "

என்று கூறியுள்ளார்

"வான் கவிந்த................................
வையகமெல்லாம் பெறினும் உறையற்க
பொய்யோ டிடைமிடைந்த சொல்"

எனச் சமண முனிவர்களும் நீதிச் செய்யுள் பாடி யிருக்கின்றனர். வாய்மையை விரதமாகக்கொண்டு மேன்மை பெற்றிருந்த நம் நாட்டின்கண் அரிச்சந்திரன் என்ன, தருமர், மனு, ராமர், பரதன், மற்றும் எண்ணிலா மக்கள் என்ன, இவர்களெல்லாம் சத்தியத்தைக் கடைப்பிடித்துக் (கடவுளே வாய்மை, வாய்மையே கடவுள்) என்ற திருமந்திரத்தைச் சிரமேற்கொண்டு மேன்மை யடைந்தது யாவரும் அறியாததன்று. ஆதலின் நாமும் வாய்மையை எக் காலத்தும் கைக்கொண்டு பொய்மையை அறவே யொழித்தல் வேண்டும்.

## வள்ளுவர் உள்ளம்.

(315-ம் பக்கத்தொடர்ச்சி.)

(தொ. மு. பாஸ்கரத் தொண்டைமான், பி. ஏ.)

இதுவரை வள்ளுவர் உள்ளத்தை ஆராய்ந்த நாம் அவர் பிறமக்களின் உள்ளத்தை எவ்வாறு உணர்ந்திருக்கின்றர் என்பதும் அதை நூலில் எவ்வாறு அமைத்துக் கூறுகின்றார் என்பதும் ஆராய்வாம். பிறர் உள்ளத்தை உணர்ந்து அதன் தன்மையை உள்ளவாறே அவர் குறளில் அமைக்கும் பெற்றி, ஒரு பொருள் அல்லது ஒரு உயிர் இவைகளின் உருவத்தைச் சித்திரிக்கும் சித்திரீகனின் அரும் பெரும் திறனைவிட ஒப்புயர்வற்றதாய் விளங்குகின்றது. இல்லறமாகிய நல்லறத்தில், மக்கட்பேறு என்றதோர் சிறந்த பேறு இல்லாவிட்டால், அவ்வில்லறம் நல்லறமாகாது. அம்மக்கட் பேறு வாய்க்கப்பெறாத நம் பொய்யில் புலவர் அமைத்திருக்கும்.

> "குழலினிது யாழினிது என்பதம் மக்கள்
> மழலைச் சொல் கேளா தவர்"

> "அமிழ்தினு மாற்ற வினிதே தம்மக்கள்
> சிறுகை அளாவிய கூழ்"

என்னுங் குறள்களால் வள்ளுவர் மக்களின் மனப்பான்மையை எவ்வாறு உணர்ந்து அழகாக எடுத்துரைக்கின்றார் என்பது பெரிதும் நோக்கத் தக்கது. இக்கருத்தையே புறநானூற்றில்,

> "படைப்புப் பலபடைத்துப் பலரோடு உண்ணு
> முடைப்பெருஞ் செல்வ ராயினும் இடைப்படக்
> குறு குறு நடந்து சிறுகை நீட்டி
> இட்டுந் தொட்டுங் கவ்வியும் துழந்தும்
> நெய்யுடை அடிசில் மெய்பட விதிர்த்து
> மயக்குறுமக்களை இல்லோர்க்குப்
> பயக்குறை யில்லைத் தாம் வாழு நாளே"

என்பதால் விளங்கக் காண்கிறோம். ஆகவே இப்பொய்யில் புலவர், தாமே உணர்ந்து அனுபவியாதிருந்தாலும், மக்கள் உள்ளத்தை உணர்ந்து எவ்விதம் தெற்றென விளக்கும் ஆற்றல் வாய்ந்தவராயிருக்கின்றார் என்பது வெள்ளிடை மலையாகும். இனி காதல் வயத்தனாய் ஒரு தலைவன், ஒரு தலைவியின் முன் எதிர்ப்பட்டகாலத்து தலைவன் அவளை நோக்கி எவ்விதம் ஐயுறுகின்றான் என்பதை.

> "அணங்குகொல் ஆய்மயில் கொல்லோ கனங்குழை
> மாதர்கொல் மாலும் என் நெஞ்சு"

என்று அழகாகக் கூறுகிறார். இது சாதாரணமாக காதல் வயத்தராய இருவர் மனத்திடை நிகழும் ஓர் உணர்ச்சியே யன்றோ? அதிவீரராம பாண்டியன் நைடதத்தில்,

"வடிவமை நூலிற் கூறும் வனப்பெலா மமைத்து வேதன்
கடிமலர்ச் செங்கை வண்ணம் காட்டிய உருவு கொல்லோ
அடுகணை வேனிலான் இன்னமுது கோல் தோய்த்துத் தீட்டும்
படிவமோ—பாவைதன் வடிவந்தானே"

என்று நளன், தமயந்தியைக் கண்டு ஐயுறுவதாக அமைத்திருக்கின்றார். மற்றும், இவ்விரு காதலரும் ஒருவரை ஒருவர் நோக்கும்போது அவர்கள் கண்கள் ஒன்றை ஒன்று கவ்வுதலையும் அதனால் காதலர் இருவரும் கருத்தொருமித்து ஆதரவு படுகின்றதையும் எவ்வளவு அழகாய் உணர்ந்து,

"கண்ணொடு கண்ணிணை நோக்கொக்கின் வாய்ச்சொற்கள்
என்ன பயனு மில"

என்று கூறுகின்றார். இக்குறளை, காதல் வயத்தாராய பதிய தலைவனும் தலைவியும் என்றும் மறக்கும் திறத்தினரோ? இதையே கவியரசாகிய கம்பரும்.

"எண்ணரு நலத்தினாளினைய நின்றுழி
கண்ணொடு கண்ணினை கவ்வி ஒன்றையொன்று
உண்ணவும் நிலைபெறாது உணர்வும் ஒன்றிட
அண்ணலும் நோக்கினான் அவளும் நோக்கினாள்.

என்று அமைத்திருக்கின்றார். ஆகவே கம்பர் பெருமான் இராமனிடத்தும் சீதையிடத்தும் விளக்குகின்ற உள்ளத்தின் உயர்வை, நம்புலவர் பெருமகன், எவ்வாறு அருமையாய் உணர்ந்து அதை அழகாய்த் தமது நூலில் அமைத்திருக்கின்றார் என்பது பெற்றும். இவ்விடத்துச் சாதாரணமாக மக்களிடையே வழங்கப்பட்டுவரும் ஓர் சிறு கதை ஞாபகத்துக்கு வருகின்றது.

திருக்குறளானது மதுரைக் கடைச்சங்கத்தில் அரங்கேறியதென்பதும், அக்காலத்து வள்ளுவரைச் சங்கப்புலவர்கள் எள்ளியதும், பின்னால் பொற்றாமரையிலிருந்த சங்கப்பலகை வள்ளுவர் குறளை மட்டுந் தன்னகத்தே கொண்டு வினைய நூல்களை ஏற்காது திகழ்ந்ததும், பின்னர் சங்கப் புலவர் நாற்பத்தொன்பதின்மரும் சாற்றுக் கவிகள் கொடுத்ததும் நாம் கர்ண பரம்பரையாய் அறிந்ததோர் கதையாகும். நிற்க இவ்விதம் வள்ளுவர் நூல் அரங்கேறுங் காலையில், வள்ளுவர்,

"பாலொடு தேன் கலந்தற்றே பணிமொழி
வாலெயி றூறிய நீர்"

என்ற குறள் வந்தது. அப்பொழுது எல்லாம்வல்ல இறைவன் கவிக்கும் குற்றம் கற்பித்த பரமச்சரிய விரதம் பூண்டிருந்த நக்கீரர் "இது சரியன்று; கேவலம்! ஒரு பெண்ணின் உமிழ்நீருக்கு இவ்வளவு பெருமையா? இது யான் ஒப்பும்திறத்தினதன்று. இது கவிஎர் கூற்றே" என்று எள்ளினார். இதையுணர்ந்த நம் செந்நாப்போதர் இதன் உண்மையை நக்கீரருக்கு உணர்த்த வேண்டி, மதுரை நகரிலிருந்த பண்டாரவல்லி என்னும் தாசியிடம் சென்று இவரது குறையிரந்து நிற்கவும், அத்தாசியும் இவரது சொல்லை மெய்ப்பித்துத் தருவதாக வாக்களித்தனள். சில நாளில் பண்டாரவல்லியின் சூழ்ச்சியால் நக்கீரரும் அவள் தன் மோக வலையில் வீழ்ந்து, காமக் கடலில் திளைத்து

இன்புறுவாராயினர். பின்னர் பல நாட் செல்ல, சங்கப்புலவர்களை நினைந்து நக்கீரர் புறப்படவும், அப்போது, பண்டாரவல்லி தன் பேரில் ஒரு கவியியற்றித் தரும்படி வேண்ட கீரர் அதற்கிசைந்து,

"வண்டுமொய்த் தனைய கூந்தல் மதனபண் டார வல்லி
கெண்டையோடொத்த கண்ணாள் கிளிமொழி வாயினூறல்
கண்டு சர்க்கரையோ தேனோ கனியொடு கலந்த பாகோ
அண்டர்மா முனிவர்க்கெல்லாம் அமுதமென் றளிக்கலாமே"

என்றதோர் செய்யுளை இயற்றி, தன் கைச்சாத்திட்டுக் கொடுத்தார். அதை வள்ளுவர் அவளிடம் பெற்று வந்து சங்கப் புலவர்களிடம் காட்டி தான் கூறிய குறளின் உண்மையை நிலைநிறுத்தினார் என்று கூறுப. இக்கதை உண்மையென்று யான் கூற முன்வரவில்லை. எனினும், இக்கதை, நம் வள்ளுவப் பெரியார் மக்கள் உள்ளத்தை யின்னவாறு உணர்ந்திருக்கின்றார் என்பதை நாம் அறிய ஓர் சிறந்த சான்றாக அமைகின்றது. கதையைக் கொள்ளுவார் கொள்ளுக தள்ளுவார் தள்ளுக.

இதுவரை கூறியவற்றால், வள்ளுவரது உள்ளம் எத்தன்மையில் அமையப்பெற்றிருக்கிறதென்பதும், மற்றும் அவர் மக்கள் மன நிலையையே தன் கவி நலமாகக்கொண்டு நூலியற்றும் பெற்றிவாய்ந்தவரென்பதும் பெறும். ஆகவே நான் எடுத்துக்கொண்ட வள்ளுவர் உள்ளமென்னும் பொருள் ஒரு சிறிது விளக்கமுறுவதாகும். இன்னும், பெரியார் பலரும் அவரது நூலைத் துருவி ஆராய்வார்களாயின் அதில் புதுப்புதுக் கருத்துகள் பொன்னே போல் புதைந்து கிடக்கக் காண்பார்கள் என்று கூறி என் பணியை முடிக்கின்றேன்.

## தாய் நாலடி பாய்ந்தால் குட்டி எட்டடி பாயும்.

" நீ உன்னுடைய கணவனை எதிர்த்துப் பேசாமல் அவன் சொற்படி நடந்தாலல்லவோ நீ பெற்ற பெண்ணும் அப்படியே அவளுடைய கொழுநனிடம் மரியாதையா யிருப்பாள்! நீ உன் கணவன் முன் ஆடும் ஆட்டங்களையும் பாடும் பாட்டுக்களையும் பார்க்கப் பார்க்க, அவள் நன்றாகத் தேறித் தெளிந்து விடுகிறளே! "தாய் நாலடி பாய்ந்தால் குட்டி எட்டடி பாயும்" என்பதுபோல் உன் பெண்ணும் ஒருவனுக்குப் புண்ணாகவே ஆகிவிடுகிறள்."

(புண்பட்ட கணவன்.)




## வேதாந்த சாரசங்கிரக வசனம்.

(பூ. ஸ்ரீநிவாசன்.)

(406-ம் பக்கத் தொடர்ச்சி.)

### ஆத்மாவின் அத்துவிதத் தன்மை.

சீடன்:—சுவாமி! சத்து சித்து ஆனந்தம் என்னும் இம்மூன்றும் ஆத்மாவின் குணங்களோ?

குரு:—ஆத்மா நிர்க்குணன். நிர்க்குணனுக்குக் குணங்கள் எங்ஙனம் சம்பவிக்கும்? சம்பவிக்காதன்றோ? ஆதலால் சச்சிதானந்தங்கள் ஆத்மாவின் குணங்களன்று; ஆத்மாவின் சொரூபமேயாம்.

ஓர் வஸ்துவிற்கு விசேஷணம் (ஒன்றைப் பிறவற்றினின்றும் வேறு பிரித்தறிவித்தற் கேதுவா யிருப்பது விசேஷண மெனப்படும்.) கூறவேண்டுமாயின், அவ்வஸ்துவிற்கு அன்னியமாக வேறு வஸ்துக்களிருப்பின் விசேஷணங் கூறவேண்டுவ தவசியம். தனக்கன்னியமாக வேறு வஸ்துக்களில்லாத வொன்றிற்கு விசேஷண மவசியமின்று. (உதாரணமாக:—வெண் தாமரை என்பதில் தாமரை விசேஷியம்; வெண்மை விசேஷணம். இந்த விசேஷணம் செந்தாமரை முதலியவை யிருப்பதால் அவற்றினின்று வேறு பிரித்துக்காட்ட வந்தது. செந்தாமரை முதலிய வேறு தாமரைகளில்லாமல் வெண்டாமரை மட்டும் இருக்குமாயின் அப்பொழுது தாமரை என்று சொல்வதே போதும், வெண்மை என்னும் அடைமொழி (விசேஷணம்) கொடுத்து வெண்டாமரை என்று கூறவேண்டுவதின்று. வெண்மையாக விருப்பினும் மல்லிகை வெண் மல்லிகை எனக் கூறப்படுவதில்லை; வேறு நிற மல்லிகைகளில்லாமையின். அதுபோல) பிரஹ்மத்திற்கு அன்னியமாக வேறொரு வஸ்து இல்லாமையால் அதற்கு விசேஷணங் கூறவேண்டுவதின்று. ஆதலின் சச்சிதானந்தங்களைக் குணங்களாகக் கொள்ளாமல் பிரஹ்மத்தின் சொரூபமாகக் கொள்ளவேண்டும்.

சீடன்:—பிரஹ்மத்திற் கன்னியமாக உலகம் இருக்கையில் பிரஹ்மம் இரண்டாவதற்றதெனக்கூறல் எவ்வாறு பொருந்தும்?

குரு:—பிரபஞ்சம் இருப்பதாகக் காணப்படினும் அது மித்தியா மாத்திரமாக வுள்ளதே யன்றி அது ஒரு உண்மைப் பொருளன்று. ஆகலின் பரமாத்மா அத்விதீயன் (இரண்டாவதற்றவன்). இங்ஙனம் இரண்டாவது பொருளில்லாமையின் விசேஷிக்கத் தக்கவனுகான். தான் மாத்திரமே யிருப்பவன்; நிர்க்குணன் என்று சுருதியும் கூறுகின்றது. ஆகலின் சச்சிதானந்தங்கள் குணங்களன்றாம். வெப்பமும் ஒளியும் நெருப்பிற்கு எங்ஙனம் சொரூபமோ அங்ஙனமே சச்சிதானந்தங்கள் ஆத்மாவிற்குச் சொரூபமென்று நிச்சயிக்கப்பட்டுள்ளன. இவ்வாறு தனக்கன்னியமாக

வேறொரு பொருளில்லாமையானும் ஆனந்தாதிகள் குணங்களாக வின்றிச் சொரூபமாக விருத்தலானும் அத்விதீய பரமாத்மாவினிடத்து சஜாதீயம் விஜாதீயம் சுவகதம் என்னும் மூவகைப் பேதங்களுமில்லை.

சீடன்:—அஃதெங்ஙனம்?

குரு:—(பேதம் (1) சஜாதீயம், (2) விஜாதீயம், (3) சுவகதம் என மூன்று வகையாம்.

(1) சஜாதீய பேதம்:—ஒரே ஜாதியாயுள்ள வஸ்துக்களுள் ஒன்றற்கொன்றுள்ள பேதமாம். அது, ஒரு விருக்ஷத்திற்கும் மற்றொரு விருக்ஷத்திற்குமுள்ள பேதம் போல்வதாம்.

(2) விஜாதீய பேதம்:—வெவ்வேறு ஜாதியாயுள்ள வஸ்துக்களுள் ஒன்றற்கொன்றுள்ள பேதமாம். அது, விருக்ஷத்திற்கும் கல் முதலியவற்றிற்குமுள்ள பேதம் போல்வதாம்.

(3) சுவகத பேதம்:—ஒரு பொருளின் பல பாகங்களுள் ஒன்றற்கொன்றுள்ள பேதமாம். அது, விருக்ஷத்திற்கும் அதன் அவயவமாயுள்ள இலை பூ முதலியவற்றிற்குமுள்ள பேதம் போல்வதாம்.)

பரமாத்மாவினிடத் தாரோபிக்கப்பட்ட இப்பிரபஞ்சம் மித்தியா வடிவமாயுள்ளது என்று நிஷேதிப்பதினால் (பிரபஞ்சத்தின் அபவாதத்தால்) விஜாதீய பேதம் (பிரஹ்மத்திற்கு வேறான இலக்கணமுடைய பிரபஞ்சம் இருக்கின்றது எனக்கூறுதல்) நிராகரிக்கப்படும். பிரிய சீடனே! அதன் விவரத்தைக் கேட்பாயாக.

## அபவாதம்.

பிரஹ்மம் ஒன்றே நித்தியம். அதற்கன்னியமாகக் காணப்படும் பிரபஞ்சம் மித்தையாகலின் அப்பிரஹ்மத்தினிடத்துக் கற்பிதமா யிருப்பதாம். அதின்வேறாக வில்லையாம் என்பதைச் சீடனுக் குணர்த்தும் பொருட்டு அபவாத யுக்தி கூறுகின்றார் ஆசிரியர்.

அத்தியாரோபமென்றும் அபவாதமென்றும் இரண்டு யுக்திகள் வேதாந்தத்திற் கூறப்படும். அத்தியாரோபம் ஆரோபம் அத்தியாசம் கற்பனை என்பன ஒரு பொருட் சொற்கள். இஃது ஒன்றை வேறொன்றாக வுணர்தலாம். அதாவது பழுதையைப் பாம்பென்றும் கட்டையைக் கள்ளனென்றும் கிளிஞ்சலை வெள்ளியென்றும் உணர்தல் போல்வதாம். (இது முன்னர் கூறப்பட்டது.)

அபவாத யுக்தியாவது:—கற்பனையைத் தள்ளி உள்ளபொருளைக் காண்டலாம். அது, பாம்பன்று பழுதை; கள்ளனன்று கட்டை; வெள்ளியன்று கிளிஞ்சல் என்று உணர்தல் போல்வதாம். இவ்விரண்டில்

கற்பனை வந்த வாறு காட்டினேம் காண்ப வெல்லாம்
சொற்பனம் போல வெண்ணித் துணிந்தவன் ஞானி யாவான்
செற்புதை மழைக்கா லம்போய்த் தெளிந்தவா காயம் போல
அற்புத முத்தி சேரு மபவாத வழியுங் கேளாய்.

என்று கைவல்யநவநீதங் கூறுகிறபடி, அத்தியாசம் முன்னர் கூறப்பட்டமையின் இங்கு இரண்டாவதாகிய அபவாதயுக்தி கூறுகின்றார்.

கயிற்றின் விவர்த்த (கற்பித) வடிவமாகிய பாம்பை (இது பாம்பன்று; உண்மையிற்) கயிறே என்று காண்பதுபோல, பரமாத்மாவின் விவர்த்த மாகிய பிரபஞ்சத்தைப் பரமாத்மாவாகவே காணுதல் அபவாதமாமெனப் பெரியோர் கூறுவர்.

(இதனை விளங்கக் கூறுகின்றார்.)

எல்லாவித ஜீவராசிகளின் தூல சரீரங்களையும் அவைகட்கு உணவுப் பொருள்களாக வுள்ளவைகளையும் அவற்றிற் கிருப்பிடமாகவுள்ள பிரஹ்மாண்டத்தையும் பஞ்சீகரணம் செய்யப்பட்ட (பஞ்சீகரண விவரம் முன்னர் கூறப் பட்டது. ஞாபகப்படுத்திக்கொள்க. இன்றேல், முந்திய சஞ்சிகைகளைப் பார்த்தேனும் அறிக.) தூல பூதங்களின் வடிவமாகவே காணவேண்டும். ஏனெனின்:

எப்பொருள் எதனுடைய காரியரூபமாகக் காணப்படுகின்றதோ அப் பொருள் அக்காரண வஸ்துவே யாகும். (வேறுதலில்லை). மண்ணின் காரிய மாகிய கடம் முதலியவை நன்கு விசாரிக்கு மிடத்து மண்ணைக் காட்டிலும் வேறாக இருப்பதில்லை. ஓர் குடத்தைச் சோதித்தால் உள்ளும் புறமும் மண்ணே காணப்படுகின்றது. ஆகலின் குடம் மண்ணைவிட வேறல்ல. சொரூபத்தில் மண்ணையன்றி வேறாகவில்லாத வொன்றை குடம் சட்டிபானை முதலிய பெயர்களா லழைக்கின்றனர். விசாரிக்கு மிடத்து குடம் சட்டிபானை என்னும் சொற்களுக்கே பேதமன்றி, எல்லாம் மண்ணேயாகலின் வஸ்துவில் பேதமில்லை. ஆகவே எப்போதும் காரியம் தன் காரணத்தினும் பின்ன மன்று. இவ்வாறே சகல பொருள்களும் எவ்வெப் பூதத்தாலுண்டாயினவோ அவை அப்பூதங்களைவிட வேறனவை யன்று; (இதனால் முற்கூறிய சரீராதிகள் பஞ்சீகிருத பஞ்சமகா பூதங்களின் காரியமா யிருத்தலின் அவற்றிற்கு அன்னிய மன்று. அப்பூதங்களேயாம் என்பது பெறப்படுதல் காண்க.)

அந்த பஞ்சீகிருத (பஞ்சீகரணம் செய்யப்பட்ட) பூதங்களும் சூக்கும சரீரங்களும் அபஞ்சீகிருத (பஞ்சீகரணம் செய்யப்படாத) சூக்கும பூதங்களா லுண்டானவையாகலின் அவையனைத்தும் சூக்கும பூதங்களேயாம். அந்த அபஞ்சீகிருத பூதங்களும் அவற்றின் சத்துவம் இராசதம் தாமதம் என்னும் மூன்று குணங்களும் சொரூபத்தினால் அவற்றிற்குக் காரணமாகிய பிரகிருதியேயாம். அந்தப் பிரகிருதியும் தனக்காதாரமாகிய பிரஹ்மமேயாம். (இவ் வாறு தோன்றின முறையை, ஒன்றிலொன்றை யொடுக்கிக் காண்டலே அப வாதமாம். இவ்வாரோப அபவாதங்களின் விரிவை நாநா ஜீவவாதக்கட்டளை என்னும் சிறுநூல் நன்குரைக்கும். வாசகர்களின் உபயோகத்திற்காக அதிலுள்ள அபவாதபாகத்தை மாத்திரம் சிறிது காட்டுவது பொருத்தமான தாகும். அது இது:—

"சகல ஜீவர்களிடத்திலு மிருக்கின்ற சரீரமனைத்தும் தமக்காதாரமான ஸ்தூல பூதங்களிலே மடிந்து (முன்னிலைமை விட்டு) பூதமாத்திரமாக வொடுங்கும்; இந்த ஸ்தூல பூதங்களும் பஞ்சீகரணம் (கலப்பு) விட்டுத் தன் மாத்திரையான (சூட்சுமமான) தமோகுண பூதங்களாக மிஞ்சும்; அப்போது கேவலம் இரணிய கர்ப்பாவஸ்தை (சூக்கும பூதங்களா யிருக்கும் நிலை) என்று சொல்லப்படும். சூட்சும சரீர தத்துவ மிருபதுங் கட்டு (நிலை) விட்டுப் பூதங்

களினுடைய சத்துவ குணமும் இராஜோ குணமுமாக வொடுங்கும். அஃதெங்ஙன மெனில்:—

சகலப்பிராணிகளிடத்திலுமிருக்கின்ற அகங்காரமும், ஆக்கிராணமும், உதானமும், உபத்தமும் பிருதிவியி லொடுங்கும்; சித்தமும், சிங்குவையும், சமானமும், பாயுருவும் 'அப்புவிலொடுங்கும்; புத்தியும், சட்சுவும், அபானனும், பாதமும் அக்கினியி லொடுங்கும்; மனமும், துவக்கும், பிராணனும், பாணியும் வாயுவிலொடுங்கும்; உள்ளமும், சுரோத்திரமும், வியானனும், வாக்கும் ஆகாசத்தி லொடுங்கும். அப்போது பழையபடியே முக்குண பூதங்களாம். இந்த சூட்சும பூதங்களும் பிருதிவி அப்புவிற் கரைந்தொடுங்கும்; அப்புவும் அக்கினியிற் சுவறி யொடுங்கும்; விளக்குப்போல அக்கினியும் வாயுவி லணைந்தொடுங்கும்; வாயுவும் ஆகாசத்தி லோய்ந்தொடுங்கும்; ஆவரண சத்தியும் விட்சேப சத்தியும் மூலப்பிரகிருதியின் தமோகுண மாத்திரமாய் ஆலமரம் வித்திலொடுங்கினாற்போல இன்னுமொரு சிருட்டிக்கு வித்தாக மாயையிலும் அவித்தையிலும் ஒடுங்கும்; அந்த மாயையும் அவித்தையும் அதிநுண்மையான (சூட்சுமமான) மூலப் பிரகிருதியென்று சொல்லப்படும் விந்து தத்துவத்தி லொடுங்கும். அந்த விந்துவும் பாம்பென்கின்ற பெயர் போய்ப் பழுதையாய்க் கண்டாற்போலத் தனக்கதிஷ்டானமான பிரஹ்ம சைதன்ய மாத்திரமாக வொடுங்கும். இப்படிப் பொய்யெல்லாம் (தேகாதிப் பிரபஞ்சமெல்லாம்) மெய்ப்பொரு ளொன்றாகக்கண்டு அதுவே சுபாவ சித்தமாய் நிசமாக விருக்கின்ற தன் வடிவெனக்கண்டு தெளிந்து கவலை கெட்டிருக்கின்றவனே ஜீவன் முக்தன். இப்படித் தத்துவங்களின் ஒடுக்கஞ் சொல்லப்பட்டது.''

(இவ்வாறு எல்லாவற்றையும் ஒடுக்கிக்கண்டால் எஞ்சி நிற்பது பிரஹ்மம் ஒன்றேயாம்.)

புருஷனுக்குப் பார்வைத் தோஷத்தால் ஒன்றாகிய சந்திரன் இரண்டாகக் காணப்படுதல்போல, புத்தி தோஷத்தால் ஒரு பிரஹ்மமே அனேகமாகக் காணப்படுகின்றது. தோஷம் நீங்கின் ஏகவஸ்துவே பிரகாசிக்கும்; கயிற்றின் சொரூப ஞானத்தால் சர்ப்பமென்னும் புத்தி கயிற்றினிடத் தொடுங்குவதுபோல, பிரஹ்ம ஞானத்தால் ஜகம் என்னும் பாவம் பிராந்தியுடன் அப்பிரஹ்மத்தினிடத்தே லயமடைகின்றது. பிராந்தியாலுண்டான பேதபாவம் நீங்கினவுடனே எப்பொழுதும் இரண்டாவது பொருளில்லாததும் ஏகமா யிருப்பதுமாகிய சத்தேயுள்ளது. ஆதலால் நிர்விகற்பப் பிரஹ்மத்தினிடத்து விஜாதீய பேதமின்றாம்.

எப்பொழுது உபாதி யிருக்கிறதோ அப்பொழுது ஆத்மா அவ்வுபாதியினும் வேறாய் சஜாதீய முடையவன்போலப் பிரகாசிக்கிறான். அவ்வுபாதி சொப்பன பதார்த்தம்போல மித்தியா ரூபமாயிருத்தலின் அந்த உபாதி தோன்றாதபோது ஆத்மாதானே பிரஹ்மத்தினிடத்து ஐக்கியத்தை யடைகிறான். வேறாகத் தோன்றுவதில்லை. ஆதலால் சஜாதீய பேதமுமின்றாம்.

கடமில்லாதபோது கடாகாசம் மகாகாசமாவதுபோல உபாதியில்லாதபோது ஆத்மா தானே பிரஹ்மமாகிறான். கடமிருந்தாலும் இல்லாவிட்டாலும் ஆகாசம் எப்போதும் பரிபூரணமாகவே யிருக்கும். எப்பொழுதும் பரி

பூரணமாகவுள்ள பிரஹ்மத்திற்கு எதனால் பின்னமுண்டாகும்? பின்னப் படாத ஆகாசம் பாமராருக்குக் கடாகாச முதலிய வடிவமாகப் பின்னப்பட்டது போல் தோன்றுகின்றது. பூமி, கிராமம், க்ஷேத்திரம் முதலானவைகளாகப் பின்னமாகத் தோன்றுதல்போல், பெரியவை யனைத்திலும் பெரியதான பரப்பிரஹ்மமும் பிராந்தியால் கற்பிக்கப்பட்ட வஸ்துவினால் பரிச்சின்னப் பட்டதுபோல் தோன்றுகின்றது. ஆதலால் ஜீவப் பிரஹ்மங்களுக்குப் பேதம் கற்பிக்கப்பட்டதேயன்றி வாஸ்தவமன்று. இதுபற்றியே சுருதி பன்முறை யும் ஐக்கியத்தையே பிரதிபாதிக்கின்றது.

சுருதியானது 'தத்துவமசி' என்னும் வாக்கியத்தினால் ஜீவப் பிரஹ் மைக்கியத்தை நிரூபிக்கின்றது. அந்த வாக்கியத்தில் 'தத்' பதார்த்தத்திற் கும், 'துவம்' பதார்த்தத்திற்கும் அபேதம் காட்டுவதற்குப் பிரத்தியட்சாதி கள் விரோதமா யிருத்தலின் லட்சியார்த்தத்திற்கே அபேதம் சித்திக்கும்.

சீடன்:—தேசிக மூர்த்தியே! 'தத், துவம்' என்னும் பதங்களுக்கு எத்தனை வித அர்த்தங்களுண்டு? இரண்டு பதங்களுக்கும் வாச்சியார்த்தம் எது? லட்சியார்த்தம் எது? வாச்சியார்த்தத்தில் அவ்விரோதம் எங்ஙனம் நீங்குகின்றது? இவ்வாக்கியத்தில் ஐக்கியம் கூறுதற்கு எவ்வித லட் சணம் அங்கீகரிக்கப்படுகின்றது? இவையனைத்தையும் கருணைகூர்ந்து நன்கு விளக்கியருளவேண்டும். (தொடரும்)

## சாயம் வெளுத்துப் போயிற்று.

வேஷதாரிகள் எத்தனை நாழிகைதான் மேடையில் ராஜா வாக விருந்து அதிகாரம் செய்ய முடியும்? பிடிசோற்றுக்குத் தாளம் போடுகிறவன் நாடகமேடையில் மன்னர் வேடம் பூண்டு "அன்ன சத்திரங்களெல்லாம் சரிவர நடைபெற்று வருகின்றனவா?" என்று வினவுகின்றான். இந்த தோரணை எதுமட்டும்? பொய்யாகத் தேசாபிமானியென்று பெயர் வகித்து எலிகளாய்த் திரிகின்றவர்களுடைய காலம் எத்தனை நாட்கள்தான் செல்லுபடியாகும்? காவிபூண்டு, ஆடம்பரமாய மதப்பிரசாரம் செய்து திருமேனியெங்கும் பட்டைப் பட்டை யாய் விபூதி பூசி, மறைவில் பெண்போகம் கொள்ளும் பேதை யரின் காலம் எவ்வளவுதான் நீடிக்கும்? அக்கிரமத்திற்கு அழிவு நிச்சயமாக உண்டு. போலிச்சாயம் முதலில் பிரகாசமா யிருப்பினும் விரைவில் வெளுத்துப்போம்.



# வைணவம்

## திருமங்கை ஆழ்வார் சரித்திரம்.

(திரு. எஸ். வி. வரதராஜையங்கார் எழுதியது.)

**ஸ்ரீ**ய:பதியான சர்வேஸ்வரனுடைய திவ்ய கிருபையால் உலகிருளை நீக்கி, அஞ்ஞான வ்யர்த்தராய்ச் சம்சாரமென்ற சாகரத்திலழுந்திக் கடைத்தேற வழியறியாது, 'உடம்பினைப்பெற்ற பயனாவதெல்லாம் திடம்பட ஈசனைத்தேடு' தற்பொருட் டென்பதை யோராது, ஆற்றைக் கடந்து கரையேறு தற்பொருட்டு அளிக்கப்பெற்ற புணையிருக்க, அவ்வாறு செய்யாது வெள்ளப் பெருக்கின் வழியே சென்று கடலைச் சேர்வார்போல உழலும் மாந்தரை உஜ்ஜீவிக்கும் பொருட்டுத் திருவவதாரம் செய்தவர்கள் ஆழ்வார்கள் பதினொருவரும் ஆண்டாளுமாகப் பன்னிருவராவர்.

"பொய்கையார் பூதத்தார் பேயார் புகழ்மழிசை
ஐய னருள்மாறன் சேரலர்கோன்—துய்யபட்ட
நாதனன்பர் தாட்டூளி நற்பாண னற்கலிய
னீதிவர்தோற் றத்தடைவா மிங்கு" (உபதேசரத்னமாலை)

என்னும் முறைமையோடு, நம்மாழ்வாரது சீடரான மதுரகவியாழ்வாரையும், பெரியாழ்வாருக்கு, ஜனகனுக்குச் சீதைபோல அயோனிஜையாயவதரித்த, ஸ்ரீ ஆண்டாளையும் சேர்த்துப் பன்னிருவராகக் கூறுவது மரபு.

பெரிய புராணத்திற்குக் கண்ணப்ப நாயனாரேபோல, ஆழ்வார்கள் வைபவத்துள் திருமங்கை மன்னன் விளங்குகின்றார்.

* நெஞ்சுக் கிருள்கடி தீபம் அடங்கா நெடும்பிறவி
நஞ்சுக்கு நல்ல வமுதம் தமிழநன் னூல்துறைகள்
அஞ்சுக் கிலக்கியம் ஆரணசாரம் பரசமயப்
பஞ்சுக் கனலின் பொறிபர காலன் பனுவல்களே.

என்று ஆழ்வான் அருளிச் செய்ததற்கேற்ப, நாலாயிர திவ்ய ப்ரபந்தத்துள் பொருட்பொலிவும், சொல் நயங்களும் சிறந்து விளங்கும் உருக்கமான திருப்பாசுரங்கள் ஆயிரத்திற்கதிகமாக அருளிச்செய்துள்ள திருமங்கை மன்னன், கங்கையிற் புனிதமாய காவிரியாறு புனல் நிறைந்து பாயும் நீர்வள நிலவளங்களால் மிக்க சோழமண்டலத்தில் திருமங்கை நாட்டில், திருவாலி திருநகரி யென்னும் திவ்ய தேசத்திற்கு அருகிலுள்ள திருக்குறையலூரில் கள்ளர் மரபிலவதரித்தவர். இவரது தந்தை சோழ மன்னரின் சேனைத் தலைவர். ஆழ்வார் அவதரித்த காலம் கலியுகத்தில் மூந்நூற்றுத் தொண்ணூற்றெட்டாவதான நள வருஷம் பூர்ணிமை திதி கூடிய வியாழக்கிழமையில் கார்த்திகை மாதம் கிருத்திகா நட்சத்திரம் என்பர். இவர் விஷ்ணுவின் சார்ங்கமென்னும் கார்முகத்தின் அம்சமாய் அவதரித்தவர். இவர் மூல

---

* ஆழ்வான் அருளிச்செய்த தனியன்.

மூர்த்திபோல் நீல நிறமுடையராயிருந்தமைபற்றிப் பெற்றோர் இவருக்கு நீலனென்று பெயரிட்டனர்.

ஆழ்வார் இளமையிலேயே தமது குடிக்கேற்ப, வில் வாள் வித்தைகளில் வல்லவராகிச் சோழமன்னனை யடுத்துச் சேனைத்தலைவராகி, அவன் ஏவல் வழி பகைவர்களைச் செருக்கடக்கி, போர் முகத்தில் வந்தெதிர்த்தவர்களெல்லோரும் புறங்காட்டியோடுமாறு வெருட்டி அப்பற்றலர் தமக்குக் காலனாய் விளங்கினமையின் பரகாலன் என்ற பட்டப்பெயரும் பெற்றார். சென்ற போர்களிலெல்லாம் வெற்றிவாகை சூடிவரும் இவரது ஆற்றலுக் குகந்த அபயராசன் இவரைத் திருமங்கை நாட்டிற்குச் சிற்றரசனாக்கினன். பரகாலரும் குறுநிலமன்னராய்ச் செங்கோலோச்சிப் புகழேந்தி இளமங்கையர் இன்னிசை பாடக்கேட்டு இன்புறுவதும், கூத்துக்களில் விருப்புக்கொள்வதுமாயிருந்தார்.

இங்ஙனமாக, அந்நாட்டில் திருவெள்ளக்குளம் என்ற திவ்ய தேசத்தில் உம்பர் நாட்டிலுமில்லாததென்று சிறப்பித்துக் கூறத்தக்க ஓர் தாமரைப் பொய்கையில், தேவமாதர்கள் பலர் உவந்து வந்து நீராடிச் செல்லுமளவில், அவர்களுள் ஒருத்தியான திருமாமகள் என்பாள் மட்டும் சுயேச்சையாய் தெய்வ உருவம் நீங்கி மானிட வடிவங்கொண்டு குமுதமலரொன்றைப் பறித்துக்கொண்டிருந்தாள். அவ்வமயம் அப்பொய்கைக்கு அனுஷ்டானஞ் செய்ய வந்த வைணவ வைத்தியரொருவர் அவளைக் கண்டு, 'நீ யார்?' என்று வினவ, அந்த நங்கை தன்னுடைய வரலாற்றைக் கூறித் தன்னைக் காப்பாற்றுமாறு வேண்ட, மகப்பேறில்லா அவருமிசைந்து அப்பெண்மணியைத் தமது இல்லத்திற்கு அழைத்துச்சென்று, குமுதமலர் கொய்தவண்ணமிருந்த சமயத்தில் அவளைத் தாம் கண்டமையால் குமுதவல்லி யென்று அவளுக்குப் பெயரிட்டுச் சீலமுடன் வளர்த்து வந்தார். குமுதவல்லி நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து விவாகத்துக்குரிய நிலையை எய்தினள். அது கண்டு அவள் தந்தை 'இவ்வுத்தம நங்கைக்கு ஏற்ற கணவன் கிடைப்பானோ?' என்ற கவலை மிக்குற்றிருந்தார்.

இப்படியிருக்கும்போது, குமுதவல்லியின் அழகைக் கண்டோர் அதை வருணிக்கக் கேட்டார் பரகாலர்; விட்டார் அரசகாரியங்களனைத்தையும்; அவருடைய உடலைக் காட்டிலும் மனம் மாறுதவேகமாய் எழுந்தது. விரைந்து திருநாங்கூரென்னும் திருப்பதியைச்சார்ந்த திருவெள்ளக்குளத்தை எம்பெருமான் அருள்வெள்ளத்தால் அரிதிலடைந்து அவ்வைத்தியர் வீட்டையடைந்தார். அடைந்தவர் அங்குள்ள வைத்தியரோடு பேசிக்கொண்டிருக்கையில் குமுதவல்லி கண்ணெதிரிற்படக் கண்டதும் தமது மனமாகிய குமுதத்தில் காதலாகிய தேன் அரும்பப்பெற்றவராய், அவளைத் தமக்கு மணம்புரிவிக்குமாறு வைத்தியரை வேண்ட, அவரும் இசைந்தார். உடனே, பரகாலர் தாம் கொண்டுவந்த ஆடையாபரணங்களை அவண் பரப்பி ஆவலுடனிருந்தார். அப்பொழுது குமுதவல்லி 'தப்தசக்கராங்கம் திவ்யோர்த்தவ புண்டரம் முதலிய பஞ்ச ஸம்ஸ்காரமுமுடைய ஓர் வைணவருக்கேயன்றி மற்றொருவர்க்கு நான் உரியவள் ஆகமாட்டேன்' என்றுரைத்தாள். ஆலிநாடர் அவற்றை இதன் முன்பு அறியாதவராயினும், சம்ஸ்கார ஆர்வத்தை அடைந்தவரல்லாதவரானாலும் குமுதவல்லியை மணக்க வேண்டுமென்ற காதல் மிகுதியால், கணமுந் தாழ்க்காமல் † திருநறையூர் என்னும் திருப்பதியை யடைந்து

† கும்பகோணத்திற்குத் தென்கிழக்கில் எட்டுமைல் தூரத்திலுள்ளது.

அங்கு எழுந்தருளியுள்ள நம்பி என்னும் திருநாமங்கொண்ட பெருமாள் முன்னே நின்று தமது குறை கூறி இரங்கிப் பிரார்த்திக்க அப்பெருமாளால் சங்க சக்ர முத்திரைகள் பொறிக்கப்பெற்று, துவாதச ஊர்த்துவ புண்டரங்க ளணிந்து ஓடோடி திருவெள்ளக்குளத்தை யடைந்தார்.

ஆலிநாடர் வந்தமை யறிந்து குமுதவல்லியார், அவ்வளவோடு நில்லாமல் அவரை நோக்கி "நீர் தினந்தோறும் ஆயிரத்தெட்டு பாகவதோத்தமர்களுக்குத் திருவமுது செய்வித்து, அவர்கள் போக்யமாக உண்ட பின்னர், அவர்களுடைய திருவடிகளைச் சோதித்து, அந்த ஸ்ரீபாத தீர்த்தத்தையும், அவர்கள் திருவமுது செய்தருளிய உச்சிட்டத்தையும் உண்ணவேண்டும். இங்ஙனம் ஓராண்டளவும் செய்து வரவேண்டும். இல்லையேல் உம்மை நான் மணக்க இசையேன்" என்றுரைத்தனள். ஆலிநாடர் காதல் மிகுதியால் இவைமட்டுமல்ல, இன்னும் எவ்வளவு கூறினும் செய்துவிடக் கூடியவராயிருந்தார்; நங்கையின் விருப்பப்படியே செய்வதாக சூளுரை செய்தார். பின்னர் திருமணம் நடந்தேறியது.

அப்பால், பரகாலர் தாம் வாக்களித்தவாறே, உத்தம நங்கையான குமுதவல்லி உவக்க, நாளும் ஈஸ்வராராதனத்தைவிடச் சிறந்த பாகவதாராதனஞ் செய்து உள்ளங்களித்திருந்தார். குமுதவல்லியை மனைவியாக அடையப் பெற்ற பெரும் பாக்கியத்தாலன்றோ, கள்ளர் குலத்திற்றோன்றி மெய்ஞ்ஞான மற்று உழன்றலைந்த பரகாலர் உத்தமமான சத்கர்மாவிலீடுபட்டு, அனுதினமும் 'நாராயணாவென்னும் நாமம்' ஆகிற திருமந்திரத்தை செவிக்குணவாகக் கொண்டு அந்தப்பழக்கத்தின் முதிர்ச்சியால் அடைதற்கரிய பெரும்பேற்றை யடைந்தார்! குமுதவல்லியன்றோ பரகாலருக்கு அமுதமாயினாள்; அமுதத்தினுமினிய ஆழ்வார் என்னும் பதத்தை அவர் அடையக் காரணமாய் நின்றாள். இத்தகைய சிறந்த ஸ்திரீரத்னங்களன்றோ நம் நாட்டிற் கணிகலனாய் விளங்குவோர். ஏனையோர் பிணியை வளர்க்கும் பேய்களுக்கன்றோ ஒப்பாவர். நிற்க, பாகவதோத்தமர்களுடைய பகவந் நாம ஸ்மரணையைக் கேட்ட பரகாலர் தம்மை மறந்தார். தாமொரு குறுநில மன்னரென்ற நினைவும், அபயகுல மன்னருக்குப் பகுதி செலுத்த வேண்டியவர் என்னும் உணர்ச்சியும் அவருக்கு இலவாயின. ஸ்ரீராமதாஸர் எங்ஙனம் நவாபுக்குச் செலுத்தவேண்டிய பகுதிப்பணத்தைக்கொண்டு பத்ராசல ஸ்ரீராமனுக்குக் கோயில் ஜீர்ணோத்தாரணத்திருப்பணியைச் செய்து முடித்தாரோ, அதுபோல ஆலிநாடர் பாகவதாராதனத்தில், சோழ மன்னருக்குச் செலுத்தவேண்டிய பகுதிப்பொருளைத் தாராளமாகச் செலவிட்டு ஆயிரத்தெட்டென்னும் கணக்கின்றி, வந்த பக்தர்கட்கெல்லாம் உணவளித்து வந்தார். திருக்குறையலூரில் எழுந்த பகவந்நாமஸ்மரணப் பேரொலி விண்ணளாவியது. எதற்கும் பழக்கமும் சகவாஸமுமன்றோ காரணமாகின்றது. 'சத்சங்கத்வே நிர்ச்சங்கத்வம்' என்றபடி மெய்யடியார்களுக்குத் திருவமுதளித்தமையால் மனபரிபக்குவமும், அவர்களுடைய கூட்டுறவால் நற்செய்கையும், அவர்களது பக்தியால் தீய எண்ணங்களின் ஒழிவும், அன்னோர் உச்சிஷ்டத்தையும், திருவடி கழுவிய நீரையும் உட்கொண்டமையால் அகங்கார மமகார நிவர்த்தியும் ஏற்பட, 'அடியேன்! எளியேன்' என்னும் தன்மையும் ஆலிநாடரின் மோக்ஷ சாதனங்களாயின. பரகாலர் பழைய குணங்கள் மாறி, எம்பெருமானுடைய கடாக்ஷ வீக்ஷண்யத்திற்குப் பாத்திரராகும் பரிபக்குவத்தை அடைந்திருந்தார்.

(தொடரும்.)

## தாத்தாவின் சிறு கதைகள்.
## குழந்தையின் சுஞ்சிசயங்கள்.

(லக்ஷ்மீ காந்தன் எழுதியது.)

[அனுபவரஸம் ததும்பிய அரிய விஷயங்களை எளிய நடையில் எல்லார் தமக்கும் இன்பம் பயக்குமாறு எழுதும் பெரிய ருஷியமுனி டால்ஸ்டாய். ஆதலின், அவருக்கு தாத்தா என்ற பெயர் கொடுத்து அவரியற்றிய கதையை இங்கு எழுதுகிறோம்.]

### 1. அரசாங்க வரி.

ஒரு வரிவசூலிப்போர் (பில்கலெக்டர்) ஒரு சிறு குடிசையில் நுழைந்தார். அப்பொழுது அக்குடிசையிலே 'குருஷ்கா' என்ற ஏழு வயதுள்ள ஒரு சிறுமி மட்டும் இருக்கின்றாள். 'பில்கலெக்டர்' சுற்றிப்பார்த்துவிட்டு குருஷ்காவை நோக்கி வீட்டில் ஒருவருமில்லையா? என்றார்.

குருஷ்கா:—அம்மா பசுவை ஓட்டிக்கொண்டு வரப்போயிருக்கிறாள்; அப்பா தோட்டத்தில் வேலை செய்து கொண்டிருக்கிறார்.

வந்தவர்:—சரி! உன் தாயார் வந்தவுடன் பில்கலெக்டர் வந்து போனதாகச் சொல்! இதோடு மூன்று தடவை நான் வந்து எச்சரித்தாய் விட்டதென்றும் ஞாயிற்றுக்கிழமைக்குள் வரியைச் செலுத்தித் தீரவேண்டுமென்றும் தெரிவி. இல்லையேல் உங்கள் பசுவை நான் ஓட்டிக் கொண்டு போய் விடுவேன்.

குருஷ்கா:—பசுவையா? நீ என்ன திருடனா? எங்கள் பசுவைத் திருடிக் கொண்டுபோனால் நாங்கள் சும்மா விட்டு விடுவோமா?

வந்தவர்:—(புன்னகையுடன்) என்ன புத்திசாலித்தனம் இந்தச் சிறுமிக்கு? உன் பெயரென்ன?

குருஷ்கா:—குருஷ்கா!

வந்தவர்:—குருஷ்கா! நீ மிகவும் நல்ல பெண்ணல்லவா? கவனி. நான் திருடனல்லாவிட்டாலும் உங்கள் பசுவைக் கொண்டு போவேன் என்று உன் தாயிடம் சொல்லி விடு.

குருஷ்கா:—நீ திருடனல்லாவிட்டால் ஏன் எங்கள் பசுவைக் கொண்டுபோக வேண்டும்?

வந்தவர்:—ஏனெனில்—வரி செலுத்தாததால்! செலுத்தப்படாத வரிப் பணத்திற்காக நான் பசுவை ஓட்டிக் கொண்டு போய் விடுவேன்.

குருஷ்கா:—வரி என்றால் என்ன?

வந்தவர்:—இதென்ன, இந்தப் பெண்ணோடு சங்கடமாயிருக்கிறது. வரி என்றாலென்ன தெரியுமா? அரசனது ஆணைப்படி அவருக்கு குடிகள் செலுத்தும் பணந்தான் வரி என்பது.

**துருஷ்கா:**—யாருக்காக இந்தப் பணம்?

**வந்தவர்:**—பணமெல்லாம் சேர்ந்தபின் அதைப்பற்றி அரசர் ஆலோசிப்பார்.

**துருஷ்கா:**—அவர் ஏழையல்லவே! நாங்களல்லவோ எளியவர்கள்? அவர் தான் பெரிய கோடீஸ்வரராயிற்றே. எங்களிடமிருந்து அவர் ஏன் பணம் கேட்கிறார்.

**வந்தவர்:**—அவர் அந்தப் பணத்தைச் சொந்தமாகச் செலவு செய்யமாட்டார்; பாமரஜனங்களாகிய நமக்காகவே செலவிடுகிறார். நமக்கு வேண்டிய சௌகரியங்களையெல்லாம் மகாராஜா செய்கிறார். உத்தியோகஸ்தர்களுக்குச் சம்பளம்—பெரிய சேனை, பள்ளிக்கூடங்கள் இவற்றையெல்லாம் ஏற்படுத்தி நடத்துகிறார். நாம் நம்முடைய நன்மைக்காகத் தானே வரி கொடுக்கிறோம்.

**துருஷ்கா:**—சரி! எங்கள் பசுவை ஓட்டிக் கொண்டுபோனால் என்ன பிரயோஜனம்? அதில் ஒரு நன்மையும் இல்லையே.

**வந்தவர்:**—உனக்கு இன்னும் வயதானால் அந்த விஷயமெல்லாம் தெரியும். நான் சொன்னதை இப்பொழுது உன் அம்மாவிடம் சொல்லிவிடு.

**துருஷ்கா:**—இந்த ஆபாசங்களையெல்லாம் நான் அம்மாவிடம் சொல்லமாட்டேன். நீயும் உங்கள் ராஜாவும் என்னவேண்டுமானாலும் செய்து கொள்ளுங்கள் போங்கள்.

**வந்தவர்:**—அப்பப்பா! இவள் இப்பொழுதே இப்படியிருக்கிறாள். நல்ல விவேகமும் வயதும் வந்து விட்டாலோ? (செல்லுகிறார்.)

# இந்திய பசுபரிபாலனம்.

S. V. V.

பசுக்களை 'கோமாதா'வென்று வடநாட்டாரும், 'காமதேனு' வென்று தமிழ் மக்களும் பூசிப்பது வழக்கம். இந்தியாவின் வெகு பழமையான நூல்களனைத்தும் கோபரிபாலனத்தை வலியுறுத்துகின்றன. வடமொழி தென்மொழி நூல்கள் யாவும் ஆநிரை காத்த அரசர் பெருமக்களின் சிறப்பை எடுத்து விரிக்கின்றன. அவற்றுள் பலவும், ஆநிரையின் அளவிற்கேற்ப அரசனது செல்வத்தை மதித்துரைக்கின்றன; அரணை முற்றுகையிட்டுப் பகைவர்மேற் படையெடுக்கும் பார் மன்னர்கள் பசுக்களை முதற்கண் கவர்ந்து அவற்றிற்கு எத்தகைய துன்பமும் நேராவண்ணம் காப்பது கடனென்றுணர்த்துகின்றன. தைமாதப் பிறப்பான மறுநாள் கோக்களைப் பூச்சுப் பூசிப் பொங்கலிட்டு வணங்குவதும் பழம் பழக்கம். பசுக்களைக் காமதேனுவென்றும், அத்தெய்வப்பசுவின் வழி வந்தனவென்றும், அக்காமதேனுவின் வயிற்றில் உலகங்களனைத்தும், அடங்கிக் கிடக்கின்றனவென்றும் புராணங்கள் கூறுவது பொய்யே யல்ல. 'பால்' என்னும் பதத்தை நினைக்குங்கால், ஆண் பெண்ணென்னும் இருபாலரும் அதன்பால் கைகூப்பித் தொழவேண்டியவரன்றோ? பிறந்த சிசுமுதல் வயோதிகர் ஈறாக அனைவரும் பசுவின் பாலின்றி வாழமுடியுமோ? அஃறிணைப் பிராணிக்கு இத்துணை வந்தனை வழிபாடுகளியற்றுவது அறியாமையாலல்ல. பசுவின் பாலால் நாமடையும் பலன்களைச் சற்று அமைதியாக அமர்ந்து ஆலோசிப்போமாயின், மக்களாய்ப் பிறந்தாரனைவரும் அதன் வயிற்றிலடங்கியிருக்கின்றோமென்பது உண்மை! உண்மை! என்று உரக்கக் கூவுவோமன்றோ? நமக்கு இன்றியமையாத பேருதவியைச்செய்யும் பசுவை, நாம் பிற இல்வாழ் பிராணிகளைத் துன்புறுத்துவது போல அடித்தும் உதைத்தும் ஹிம்சியாதிருக்கும் பழக்கத்தைச் சுபாவத்திலேயே அடைய வேண்டுமென்றுதான், அதனிடம் தெய்வமென்னும் பாவனை நமக்குப் பெரியாரால் ஊட்டப்பட்டது. கண்ணனும் வேய்ங்குழலூதி ஆநிரை காத்து 'பசு-பதி' சம்பந்தமான பல பேருண்மைகளை வெளியிடா நின்றான். சகல மங்களமும் உண்டாகவேண்டுமென்று ஸ்திரீகள் அனுதினமும் காலையிலும் மாலையிலும் அதனை வலம் வந்து வணங்குகிறார்கள்.

பசுக்களே யன்றி அதுபோன்ற மற்றைய இல்வாழ் பிராணிகளும் தற்காலம் நமது இந்தியாவில் எந்நிலையிலுள்ளன? ஏனைய துறைகளைப் பிடித்துள்ள கிரகணம் இவற்றையும் எந்த அளவில் பிடித்துள்ளது? பசுக்களைப் பரிபாலிக்கும் விதங்களைப்பற்றி மிருக பரிபாலன அரசாங்க ஸ்தாபனர் அன்

புடன் ஆராய்ந்து வெளியிட்டுள்ள அறிக்கை யாது? பசுக்களுக்கு வரும் பிணி வகைகள் எவை? அவற்றைப் போக்கும் வழி என்ன? என்பவற்றைக் குறித்து இனிக்கீழே இயன்றவரை எழுதுவோம்.

இல்வாழ்பிராணிகள் பலவிருப்பினும் முக்கியமாகப் பசு, இடபம், முதலியவற்றின் உபயோகமே பெரும்பாலும் எங்கும் அதிகம். அதற்கு அடுத்த ரிஷபம் (விடையேறு) பலதிறப்படும். உயர்ந்து கொழுப்பு நிறைந்த திமிலும், குஞ்சம்போன்று நீண்டவாலும், பிறை போன்று உயர்ந்து வளர்ந்த கொம்புகளும் விசாலமான காதுகளும் உடைய காளைகளே உயர்ந்த வகையைச் சார்ந்தவை. இவையே விவசாயிகளின் பெருஞ் செல்வமாவன. பயிர்த்தொழிலுக்கான முக்காற்பங்கு வேலைகள் இவற்றால் ஆகின்றன. கழனிகளைக் கலப்பை கொண்டு உழுது பண்படுத்தவும் சேகரிக்கப்பெற்ற தானியங்களை வண்டிகளிலேற்றிக்கொண்டு போகவும் பொதுவாக எருதுகளும், சிறு பான்மையான இடங்களில் பசுக்களும் உபயோகப்படுகின்றன. பசுக்கள் இவற்றில் சில வேலைகளைச் செய்வதோடு பால், தயிர், நெய் முதலிய புஷ்டியாம்சமான உணவுகளையுமளிக்கின்றன. இவற்றின் தோலை பதனிட்டு ஏற்றப் பறி, தோல்வார் முதலான உபயோகங்கட்கு ஆக்கலாம்.

மேல்நாட்டைப் போன்றே இந்திய இல்வாழ் பிராணிகளுள்ளும் மாகாணந்தோறும் வேறுபாடுண்டு. சீதோஷ்ண நிலைக்கும் பூமியின் தரத்துக்கும் பயிர் வகைக்குந் தக்கவாறு மாடுகளின் கொம்பு வளர்ச்சியிருக்கும். மாடுகளின் உடலமைப்பும் உயரமும் குணங்களும் மேற்கூறிய காரணங்களைப் பொறுத்தே யிருக்கின்றன. சாதாரண கூழ் உணவிலே திருப்தியடைந்து வதியும் விவசாயிகள், மாடுகளுக்கு விசேஷமாகப் புல்வகைகளைப் பயிர் செய்வதிலோ, அல்லது பருத்திக்கொட்டை பிண்ணாக்கு முதலிய மாட்டுணவுகளை நாள்தோறும் கவலையோடு ஊட்டி வளர்ப்பதிலோ அதிகக் கவலை எடுத்துக் கொள்வதில்லை. மாடுகள் தாமாக யதேச்சையாய்க் கழனிப் புறங்களிலுள்ள புல்லை மேய்ந்து வருகின்றன. வந்ததும் அவற்றிற்குக் கழுநீர் காட்டிக் கட்டி விடுகின்றார்கள். எந்தப் பயிரை விவசாயி பாடுபட்டு விளைவித்துப் பயன் கொண்டாலோ அதன் வைக்கோலே இம்மாடுகளுக்குப் போதிய உணவாகின்றது. மேய்ச்சலுக்குச் செல்லும் மாடுகள் நல்ல புல் கிடைக்காமல், சிறிது கழுநீர் அருந்தி பலகீனமாய் நிற்கின்றன.

## மாடு வகைகள்:—

நல்ல முதல்தரமான மாடுகள் கூர்ஜரத் (Gujrat) தின் வடபாகத்தில் 'கட்ச்' பிரதேசம் முதல் வடக்காக ரஜபுதனம் வரையில் காணப்படுகின்றன. மாடுகள் வெகு நேர்த்தியாக வளருவதற்கு இப்பிரதேசத்தின் பூமியினது தரமும், அதனால் வளரும் புல் வகைகளின் செழிப்புமுமே காரணங்காளாகும். பயிரிடுங் காலத்திலும் மற்றைய காலங்களிலும் லட்சக் கணக்கான பசுக்கூட்டங்களுக்கு யதேஷ்டமான பயிர் இப்பிரதேசத்தில் உண்டு. வட இந்தியாவில் ஜனத்தொகையின் அதிகரிப்பால், நகரங்களின் பெருக்கத்தால் மாடுகள் மேய்வதற்கு அனுகூலமான பசும் புற்றரைகள் (வெளிகள்) இரண்டோரிடங்களைத் தவிர வேறில்லை.

**அமிர்த மஹால் போஷணை:** பசுக் கூட்டங்கள் மிக்கக் கருத்துடன் போஷிக்கப்படும் இடங்கள் வெகு சிலவே. மைசூர் சமஸ்தானமே

மற்றெல்லா மாகாணங்களைக் காட்டிலும் நல்ல பசுக்கூட்டங்களை யுடையதென்று கூறலாம். அமிர்த மஹாலில் போஷிக்கப்படும் பசுக்கள் நல்ல உயர்ந்த குதிரைகளைப்போல கம்பீரத்தோற்றமும், உயரமும், கொழுப்பும், பாலும் கொண்டிருக்கின்றன; பாலுட்சுவையும் பொருந்தியிருக்கின்றது. இப்பசுக்கள் நடுத்தரமான உயரமும் பழுப்பு நிறமும் உள்ளவை; அவற்றின் சீற்றமும் பலமும் சுறுசுறுப்பும் உழைப்பும் உயர் திணையின்பாற்பட்ட நம்மைப் பழிப்பதுபோலத் திகழ்வன. எருதுகளோ இருப்புத்தொடர் செய்யும் வேலையிற் பாதிக்குமேல் புரிகின்றன; சுமைகளை அலட்சியமாக இழுத்துச் செல்லுகின்றன. நீண்டு அகன்ற காதுகளும், பருத்து உருண்ட தலையும், கூர்ந்து நீண்ட கொம்புகளும், உறுதியான குளம்புகளுமுடைய இத்தகைய மாடுகளைக்காண உற்சாகமாகவே இருக்கின்றது. ஆனால் அமிர்த மஹால் பசுக்கள் தாமதமாகப் பருவமடைகின்றன; அவ்வளவு அதிகம் பாலும் கொடுப்பதில்லை.

நெல்லூர் பசுக்களும், 'ஆர்வி' பசுக்களும்: 'நெல்லூர் மாடு' என்று யாவராலும் மதிக்கப்படும் பசு எருது முதலியன பெரும்பாலும் சென்னை மாகாணத்தின் சுற்றுப்புறங்களிலுள்ளவைகளே. இவை பருத்த உடலமைப்பும் பொதுவாக வெண்மை நிறமுமுடையன. அவற்றுள், அநேகமாக பம்பாய் மாகாணத்தைச்சார்ந்த கிருஷ்ண பள்ளத்தாக்கு எருதுகளின் கலப்புப் பிறப்பு ஏற்பட்டவைகளே மிகுதியும் காணப்படுகின்றன. சென்னைக்கு வடக்கேயுள்ள சில பிரதேசங்களில் இவ்வகை எருதுகள் (சிறுபான்மை பசுக்களும்) கழனி வேலைகட்கும் வண்டியிழுக்கவுமே உபயோகப்படுகின்றன. எனவே நிரம்பப்பால் தரும் பசுக்களின் தொகை நெல்லூர் பசுக்களுள் அவ்வளவு அதிகமாயில்லை; காளைகளே அதிகம் என்பதாயிற்று. மத்ய மாகாணத்திலுள்ள மிக்க உயர்ந்த பசு எருது முதலியவற்றிற்கு ஆர்வி என்று பெயர். ஏறக்குறைய இவை நெல்லூர் மாடுகளைப் போலவே யிருந்தாலும் விசேஷமாகப் பால் கொடுப்பதில்லை. எருதுகள்மிக்க பலமுள்ளவையானாலும் சுறுசுறுப்புடன் வேலை செய்வதரிது. (தொடரும்)

## ஒரு வேண்டுகோள்.

நமது 'ஆனந்தபோதினி' மாத வெளியீட்டில் 'புராதனசங்கீதம்,' 'தமிழர் இசைக்கலை' என்ற தலையங்கங்களில் தொடர்ச்சியாக ஓர் கட்டுரை வெளிவந்து கொண்டிருப்பதை நேயர்கள் அறிவார்கள். அவ்வியாசத்தை எழுதிவரும் திருவாளர் எஸ். வி. வரதராஜையங்கார் அவர்கள் 'பஞ்சபாரதீயம்' என்னும் தமிழ் நூல் ஒன்று வேண்டுமென்று எமக்கு எழுதியுள்ளார். அப்புத்தகம் அச்சியற்றப்பெற்றுள்ள விவரம் தெரியவில்லை. நமது சந்தாதாரர்களுள் எவரேனும் ஏட்டுப் பிரதியேனும் அச்சுப் பிரதியேனும் ஒன்று கிடைக்குமானால் வாங்கி, எமக்கு அனுப்பிவைக்க வேண்டுகிறோம். அதன் விலையாக ஏதேனும் பொருளும் அளிக்கப்படும்.

பத்திராதிபர்.

# ஆரம்பக்கல்வி.

P. பரிமணப் பல்லவராயர்.

ஆரம்பக்கல்வி போதிக்கும் தற்கால முறையை அடியோடு மாற்றிப் பண்டைய முறையில் போதிக்கவேண்டுமென்றும், அதிலும் நம் மக்களுக்கு சட்டமூலமாகக் கட்டாய இலவசக்கல்வி போதிக்கும்படி கூக்குரல் இடவேண்டுமென்றும் திருவண்ணாமலை தாலூகா அக்கினிகுல க்ஷத்திரிய வாலிபர் சங்கக் காரியதரிசி இராஜ ஸ்ரீ பொ. குப்புசாமிக் கண்டர் அவர்கள், செஞ்சி தாலூகா புலிப்பட்டு கிராமத்தின் போர்டு பாடசாலைத் திறப்பு விழாவில், ஜில்லாபோர்டு மெம்பர் ராஜ பெரியண்ண கண்டர் அவர்கள் தலைமையில் கூறினதாகத்தெரிகிறது.

இக்கால முறையைச் சரியாகக்-கவனமாய்-ஊக்கமாய்-உண்மை உழைப்பால் கையாடின் சரியான-நல்ல படிப்பு ஏற்படாதென்பதில்லை. ஒருநாள் வந்த பிள்ளைகள் மறுநாள் வந்தாலன்றோ புதுமுறை ஏற்ற பலனளிக்கும். ஒருநாள் வந்தபிள்ளை ஒருநாள் வருவதில்லையே. வீடு பார்த்துக்கொள்ளவும், நெல் பார்த்துக்கொள்ளவும், பிள்ளை வைத்துக்கொள்ளவும், விவசாய-வேலை செய்யும் பெற்றோர் உற்றோர் முதலியவர்களுக்குச் சாதம் கொண்டுபோகவும், ஆடு, மாடு ஓட்டிக்கொண்டு போகவும் - பார்த்துக்கொள்ளவும், ஊர்களுக்குப் போய்வரவும், கட்டிக்கொள்ள வேஷ்டியில்லை யென்றும், விளையாட்டுகளுக்காகவும் இடை யிடையே நின்றுவிடுவதால் புதுமுறை எந்தவிதம் அந்தமாகப் பிரகாசிக்கும்? இவைகளை யெல்லாங் கவனியாமல், புதுமுறை புதுமுறை என்று போராடும் பரீட்சாதிகாரிகளுக்குப் பயந்து, புதுமுறையோடு போராடிப் போதிப்பதில் கல்வி விருத்தி நல்விருத்தியாவ தெங்ஙனம்? குறைவான விருத்தியே ஏற்படக்கூடும். இதைக்காணும் நேரமில்லாத பெற்றோர் தம்பிள்ளைகட்குப் படிப்புவரவில்லை யென்று மத்தளத்தைப்போல் உபாத்தியாயரை இம்சிப்பார்களானால் - உபாத்தியாயர்கள் என்ன செய்யக்கூடும்? உபாத்தியாயர்களின் நிலைமை என்ன என்பதை உணருங்கள். பெற்றோரின் விருப்பப்படி பழைய முறையை ஆசிரியர்கள் அநுசரிப்பார்களானால் பரீட்சாதிகாரிகளின் குறைகூறுதல் - ரிப்போர்ட்டுகளுக்கும், தாலூகா போர்டு முதலிய ஸ்தல ஸ்தாபனத்தார்களின் கண்டிப்புகளுக்கும் எதற்காக வருந்தவேண்டி நேருகிறது? மேலும் புதுமுறையின் சரியான அமைப்பின்மையாலோ, போதிப்பின் பலம் சரியாயிராததாலோ, மேல் வகுப்புகளுக்குள் உணர்ச்சியே யில்லாதிருக்கின்றது.

தமிழ் எழுத்துக் கற்பிக்கும் பழைய முறை மனத்தில் பசுமரத்தாணி போல் பதியக்கூடியதுதான். நாட்சென்று பொருள் விளங்கவும் படிப்பு ஏற்படக் கூடியதுமானதா யிருக்கின்றதுதான். உலகநீதி, ஆத்திசூடி கொன்றை வேந்தன் ஆகிய தெளிவான, சில வருஷங்கள் சென்றதும் தானே தெரிந்து கொள்ளக்கூடிய நீதிவாக்கியங்களைப் பதம் பிரித்து உரையோடு கற்பிக்க வேண்டும். வருஷ முழுவதும், 20-30-வரி தெரிந்தாலும் போதுமென்ற புது முறைக்காரர்களும் இருக்கின்றனர். புதுமுறைக்காரர்களில் அநுபவசாலிகள் இதனை ஒருபோதும் ஒத்துக் கொள்ளார்கள். வருஷ முழுவதற்கும் ஆகார தானியங்கள் சேகரித்து வைத்துக்கொண்டு கிடைக்காத காலங்களில் சிரமப் படாமல் காலந்தள்ளுபவர்களைப்போல், மேற்கூறிய எளிய நீதி வாக்கியங்களை

ஏராளமாய்ச் சிறு வயதில்-பாடம் பண்ணக்கூடிய பருவத்தில் படித்து மனப் பாடம் செய்துகொண்டால், இவர்கள் பெரியவர்களான பின்னர் தானே இலகுவில் தெரிந்துகொள்ளக்கூடும் என்பதை அநுபவசாலிகள் ஒருக்காலும் மறுக்க மாட்டார்கள். இது இக்காலத்துப் புதுமுறைக்காரரது புத்தியில் நுழைவதே யில்லை. இவை, பரீட்சாதிகாரிகளா யிருந்தவர்கள்-இருப்பவர்களுடைய அபிப்பிராயங்களாகும். என்ன செய்வது? ஏறச்சொன்னால் எருதுக்குக்கோபம், இறங்கச் சொன்னால் முடவனுக்குக்கோபம். உபாத்தியாயர்களோ, இரண்டுக்கும் இடையிலிருந்துகொண்டு நெருக்குற்று இம்சைப்பட்டு, கலக்க மில்லாத-சாந்தமான இருதயத்தோடு தொழிலைக் கவலையில்லாமல் செய்வதற்கில்லாதும் போகின்றது. காரணர் எவர்? பெற்றோரும் பரீட்சாதிகார நிர்வாகிகளும் ஆகியவர்கள்தான். இவர்கள் ஒன்றுகூடி இவ்விஷயங்களை முடிவு செய்து ஒவ்வொருவர் மனத்திலும் ஊடுருவச் செய்யாமலிருப்பதால் பல அபிப்பிராயங்கள்தான் ஏற்படும்; கருதிய பயன் காணக் கஷ்டமாகத்தானிருக்கும். கடைசியில் "ஊருக்கிளைத்தவன் பிள்ளையார் கோவிலாண்டி" என்பதுபோல், இவர்களுக் குழைத்த பள்ளிக்கூட 'வாத்தியார்மேல் குறைகூற வேண்டியதும்-குற்றம் சொல்வதும் பரம்பரை வழக்கமாய்ப் போய்விட்டது.

நாள் தவறாமல் பள்ளிக்கூடம் வராமல் மேலேகண்ட காரணங்களினால் நாள்தவறித்.தவறி-விட்டு-விட்டுப் பாடசாலைக்கு வரும் பிள்ளைகளையும் ஒருங்கேவைத்துக்கொண்டு போதிப்பது-ஒவ்வொரு பதத்தின் தாத்பரியங்களை விளக்கிப் போதிப்பது இயலாதே. என்றாலும், விட்டுவிட்டுவருங் காரணத்தால் தனித்தனியாய்ப் பாடங்கேட்டு கற்பிக்கலாம். இம்முறையில் சாவகாசமாய் ஒவ்வொரு பிள்ளைக்கும் தனித்தனி பாடத்தில்-அவ்வவர்களது பாடத்தில் உள்ள வார்த்தையின் பொருள்களையும் விளக்கிக் கற்பித்தல் அசாத்தியமே. கால அட்டவணையில் குறிப்பிட்ட 25 அல்லது 30-நிமிஷம் போதவே போதாது. எல்லாப் பிள்ளைகளையும் அவர்கள் ஒப்புவிக்க-சொல்ல வேண்டிய பாடத்தைப்பார்த்து எழுதி-அப்பியசிக்கச்சொல்லி விட்டு, ஒவ்வொரு பையனாக-முதலில் எழுதி முடித்துவிட்டிருக்கும் பையன்களாகக் கூப்பிட்டுக்கூப்பிட்டு பாடங்கேட்டுக்கேட்டு புதுப்பாடம் சொல்லிக்கொடுத்து புதுப்பாடத்தினை எழுதச் செய்து அப்பியாசிக்கச் செய்துகொண்டு வரலாம். இவ்வகையில் 3-பாடம் நடைபெறுகிறது என்றாலும் இச்சமயங்களில் இம்முறையில் பரீட்சாதிகாரிகள் வந்து பார்த்துவிடின் காலதேச வர்த்தமானத்தை யறிந்து வேலை நடக்கிறது நடந்துகொண்டிருக்கிறது என்று திருப்திகொள்ளாமல் அட்டவணைப்படி பாடம் நடக்கவில்லை. உபாத்தியாயர் ஏதோ தம் இஷ்டம்போல் பொழுதுபோக்கிக் கொண்டிருந்தார் என்று எழுதி விடுவர். இப்படி எல்லா பரீட்சாதிகாரிகளுமே யிருக்கிறார்கள் என்பதில்லை. இப்படியும் சிலர் இருக்கின்றனரென்றே குறிப்பிடுகின்றோம்.

இந்த குறிப்பிட்ட வழியில் முதல் வகுப்பினராகிய பாலர்களுக்கு இடைவிடாமல் பாடம் போதிக்க 2-அல்லது 3-பீரியட் செல்லும். இந்த இரண்டு மூன்று பீரியடும், மற்ற வகுப்புகளைக் கவனிப்பதும், ஒரு வேலை கொடுத்து விடுவதும், புதிய முறைக்கு முற்றும் விரோதமானதாகும் ஆகவே இப்பிள்ளைகள் ஒரே வருஷத்தில் தங்களுக்கேற்றவற்றைக் கற்று அடுத்த (2-வது) வருஷத்தில் 2-ம் வகுப்புக்கு வந்துவிட வேண்டுமானால் - பாடசாலைப் படிப்பு - பள்ளிப்பிள்ளைகளின் மனோ அறிவு - அஸ்திவாரம் - பலமுள்ளதாய் அமைய - ஏற்பட வேண்டுமானால், இந்த முதல் வகுப்புக்கு மட்

டும் 20-பிள்ளைகளா யிருந்தாலும் தனி உபாத்தியாயராய் இருந்தாலே - புதிய முறையிலும் போதிய விருத்தியைக் காணலாம்.

ஒரு வகையில், கட்டாயக் கல்வி முறை ஏற்பட்டாலே, பிள்ளைகளை ஒழுங்காய் தவறாமல் பாடசாலைகளுக்கு அனுப்பப் பெற்றோர்களுக்கு அக்கரை ஏற்படுமெனலாம். இப்போது இந்த அக்கரை மிகக்குறைவே. பிள்ளைகளாய் இஷ்டப்பட்டு பள்ளிக்கூடத்திற்கு வரவேண்டும், இல்லையேல் உபாத்தியாயர் இதர பிள்ளைகளை அனுப்பி வராத பிள்ளைகளை அழைத்து வரச் செய்யவேண்டும். அதற்கும் வராத பிள்ளைகளை உபாத்தியாயரே நேரில் சென்று கொண்டுவரவேண்டும். பிள்ளைகள் பள்ளிக்கூடத்திற்கு ஒழுங்காய் வராமலிருப்பதற்கும், உபாத்தியாயர் வீடுகட்குச் சென்று அழைத்து வருவதற்கும் உபாத்தியாயர்களே காரணம். இவர்கள், பிள்ளைகள் தானே பள்ளிக்கூடத்திற்குப் பிரியங்கொண்டு ஓடி வரும்படி செய்ய ஏற்பட்டிருக்கும் கிண்டர் கார்ட்டன் முறைகளைக் கையாளுவதில்லை யென சில புது முறைக்காரர்கள் இயம்பலாம். இப்படிச் சொல்லுகிறவர்கள் வந்து இருந்து புது முறைப்படியும் கால அட்டவணை பிசகாதபடியும் நடத்தினால் அந்த அருமை அப்போது தெரியும் "சொல்லுவது எளிது செய்வது அரிது" என்பது அறிந்திருந்தும் இவர்கள் இப்படி யெல்லாம் சொல்வது சொல்லுகிற விஷயத்தில் நேர் அநுபவமில்லாமல் தாம் படித்ததைக் கொண்டு மட்டும் சொல்வதென்றே சொல்வோம். இவர்கள் தம் வீட்டுத் தம் குழந்தைகளை இரண்டொருவரைப் பாடசாலைக்கு அனுப்ப எவ்வளவு முயற்சி, சமாதானம், தந்திரம் முதலியன கையாளவேண்டி யிருக்கிற தென்பதை நினைத்துப் பார்த்தால் பல குழந்தைகளை வைத்துக்கொண்டு பராமரிப்பது, ஒருவர்க்கொருவர் செய்து கொள்ளும் விஷமங்களை—சச்சரவுகளை—விளையாட்டுக் குற்றங்களை சீர்திருத்தம் செய்து—அடக்கிக்கொண்டு வருவதே எவ்வளவு சிரமமென்பதையும், இதற்குமேல் அவர்களுக்கு ஒழுக்கம், ஒருவர்க்கொருவர் ஒற்றுமை, அடக்கம் பள்ளிக்கூடத்தில் பிரியமுண்டாக்குதல், அறிவு வளர்ச்சிக்கான பேச்சுகள் படிப்புகள் ஆகியவைகளைக் கதைகள் வேடிக்கை விளையாட்டுகள் மூலமாய் உபாத்தியாயர் செய்ய வேண்டியிருக்கின்றது என்பதை எண்ணிப் பார்க்கவேண்டும்.

கட்டாயக்கல்வி ஏற்பட்டால் சில ஏழைப்பெற்றோர்க்குச் சிரமமே ஏற்படும். தங்கள் வயிற்றுப் பிழைப்பில், தங்கள் ஆடு மாடுகளைப் பார்த்துக் கொள்ளவோ, குழந்தைகளை வைத்துக்கொள்ளவோ, பார்த்துக்கொள்ளவோ இன்னும் மேலே ஆரம்பத்தில் சொல்லியவற்றையோ கவனித்துக் கொள்ள உதவி செய்ய ஏதுவில்லாமற் போகக்கூடும். இவ்வளவு நிர்ப்பாக்கிய நிலைமையில் உள்ளவர்களின் குழந்தைகளுக்குப் புத்தகமும் சிலேட்டுகளும் ஒரு வேளை பகல் ஆகாரமேனும் உதவினால் அவர்களுக்கும் ஒரு ஆதரவாக இருக்கும்; மனச் சமாதானம்—சாந்தி ஏற்படும். தங்களுடைய கஷ்டத்தில் சிரமமும் தோன்றாமல் ஒரு சிறிது பொறுப்பு சர்க்கார் பாடசாலை வழியில் ஏற்றுக்கொண்டு விட்டார்களென்ற மன நிம்மதி ஏற்பட்டு விடும். நிர்ப்பாக்கிய நிலைமையிலுள்ளவர்களைக் கல்வி சம்பந்தமாய்ச் சர்க்கார் கவனிக்கும் கடமையும் கவனித்ததாக ஏற்படும். இதனையும் நம் பிரதிநிதிகளும் பொது ஜன நன்மைக்கென்றே பாடுபடுவதாகச் சொல்வோர்களும் சங்கங்களும் கவனித்துத் தக்கது செய்து சீரும் சிறப்பும் எய்தி சிறந்துறுவார்களாக.

---

## பிருஸ்ஷா என்ற பேருபகாரி.

(K. அல்லா பிச்சை.)

நம் இந்து தேசத்தை முற்காலத்தில் ஆண்டு வந்த மகமதிய அரசர்கள் குடிகளிடத்தில் வாங்கிய வரிகளைத் தத்தம் இஷ்டப்படி, சொந்த உபயோகத்திற்கும், மற்றும் பல வீண் வேலைகளுக்கும் உபயோகப் படுத்தி வந்தார்கள். ஆனால் அவர்கள் எல்லோரும் அப்படிச் செய்து வந்தார்களில்லை. ஒருவர் இருவர் ஜன சௌகரியமான அரிய வேலைகள் செய்தார்கள். அவர்களில் முக்கியமானவரே பிருஸ்ஷா என்னும் சக்கரவர்த்தி. இவர் அநேகம் கொடுமைகளுடன் அரசாட்சி புரிந்து வந்த மகமத் டோக்ளா என்னும் அரசனுக்குப்பின் சிங்காசனம் ஏறி அரசு புரிந்தார்.

மகமத் டோக்ளா காலத்தில் கொடுமைகளை அனுபவித்த ஜனங்கள் இவ்வரசரின் காலத்தில் அதிக சௌகரியங்களை அடைந்தார்கள். யுத்தத்தில் அஞ்சா வீரர்களாகிய ஆப்கானியர் வம்சத்தில் ஜனித்தவராயினும் இவ்வரசர் யுத்தஞ் செய்து வெற்றி கொள்வதில் இஷ்டப்பட வில்லை. தான் அரசாட்சி செய்துவந்த 37 வருஷ காலத்திலும் தேசத்தில் ஓரிடத்திலும் கலகங்கள் உண்டாகாமல், கைத்தொழில், விவசாயம் முதலியவைகளை விருத்தி செய்வதிலும், தன் முன்னோர்களால் கஷ்டப்பட்ட ஜனங்கள் அதிக நன்மைகளை அடைவதற்கு வேண்டிய காரியங்களைச் செய்வதிலுமே நோக்கமாக இருந்தார்.

இவர் தமது காலத்தில் பிரஜைகளின் சௌகரியத்தின் பொருட்டு கோவில்கள், பாடசாலைகள், சாவடிகள், வைத்தியசாலைகள், கோரிகள், குளங்கள், கால்வாய்கள், முதலிய பல நன்மைகளைச் செய்து வைத்தார். அவைகளை ஒவ்வொரு சரித்திரக்காரரும் புகழ்ந்திருக்கின்றனர். யமுனை நதிக்கும், சாகார நதிக்கும் மத்தியில் அவ்விரு நதிகளையும் ஒன்றோடொன்று சேர்த்து வெட்டுவித்த கால்வாயும் "ஹிஸ்ஸார்" "பிருசபாத்" என்னும் இடங்களில் கட்டுவித்த 7 பெரிய பாலங்களும், பாலைவனங்களாயிருந்த "சர்ஹிந்து" "லூதியானு" என்னும் இடங்கள் செழித்து விளையும்படி வெட்டுவித்த மிகப்பெரிய கால்வாய்களும் இவர் ஆட்சியின் சிறப்பைக் குறிக்கின்றன.

ஒரு போகம் பயிர்செய்து வந்த பல்லாயிரம் ஏக்கர் நிலங்கள் இவர் காலத்தில் இரு போகம் விளைந்தது. இவர் வெட்டுவித்த கால்வாயின் ஓரங்களில் அநேக கிராமங்கள் ஏற்பட்டன. இவர் இறக்கும்போது இவருக்கு வயது தொண்ணூறு; இவர் மற்ற அரசர்களெல்லாம் தம் வழியைப் பின் பற்றும் படியாக நீதியுடன் அரசுபுரிந்தார். இவர் தமது பெயரால் டில்லிக்குச் சமீபத்தில் "பிருஸ்பாத்" என்ற நகரை உண்டு பண்ணினார். கடின தண்டனை அடைந்த குற்றவாளிகளுக்கு அத்தண்டனைகளை நீக்கி இலகுவான தண்டனைகள் விதித்தார். ஜனங்களிடம் அதிக வரி வாங்காமல் சொற்பமாகவே வாங்கினார். இன்னும் பலவித நன்மைகள் செய்திருக்கிறார். இவர் ஆட்சி முறையைக் கண்ட துருக்கி சக்ரவர்த்தி "காலிப்" என்பவர் இவருக்குப் பெருமையாக ஆடைகளையும் உபசார கடிதங்களையும் அனுப்பி வைத்தார். என்னே இவருடைய நீதி!

இவர் தமது ஆளுகையைப்பற்றித் தாமே சில சாசனங்கள் எழுதிவைத்திருக்கிறார். அவை பின் வருமாறு:—

சொற்ப காரியங்களுக்காக இரத்தத்தைச் சிந்துதலும் அற்ப குற்றங்களுக்காக கை கால்களைக் குறைத்துக் கொள்வதும் உயிரோடு பல வித சித்ர வதைகள் செய்வதும் முற்காலத்திலிருந்து வழக்கமாக இருந்து வருகிறது. தமது பேரருளாலே என்னை அரசனுக்க உளம் புரிந்த கடவுள் இக்கொடிய வழக்கங்களை மாற்றி நன்மையைச் செய்ய வேண்டுமென்னும் ஆசையை எனக்குக் கொடுத்திருக்கிறார். என் முன்னோர்கள் பேரில் கடவுளுக்கிருக்கும் கோபத்தை ஒருவாறு தணித்து அவரது கருணைக்கு அவர்களை பாத்திரராக்கக் கருதிச் சேர்த்துப் பிரார்த்திக்கத் தீர்மானிக்கிறேன்.

பூ விற்பவர், மீன் விற்பவர், பருத்தி ஆய்பவர், சமையற்காரர் இவர்களுக் கிடப்பட்ட வரிகளையும் சில்லரைக் கடைக்காரர்களுக்கிடப்பட்ட தீர்வைகளையும் தள்ளிவிடும்படி உத்தரவு செய்திருக்கிறேன். இவ்வித வரிகளை வசூல் செய்பவர்களின் இஷ்டத்தைப் பொறுத்ததாக விட்டு, அதனால் ஜனங்களுக்கு அதிக நிர்ப்பந்தங்களை யுண்டாக்கி வசூல் செய்வதைப் பார்க்கிலும் அவற்றை முற்றிலும் இழத்தலே நலமாகும். அன்றியும் இனிமேல் சட்ட புஸ்தகங்களில் வியக்தமாகக் கண்ட வரிகளை யன்றி மற்ற எந்த வரிகளும் வாங்கப்பட மாட்டா.

பின்வரும் குற்றங்கள் செய்பவர்களை ராஜ்யத்தி லிருந்து தூரத்தும்படி செய்திருக்கிறேன்.

தெய்வத்தை ஒப்புக்கொள்ளாத நாஸ்திகர்கள், துன்மார்க்கங்களைப் பழக்கி வைப்பவர்கள், கைக்கூலி வாங்கும் உத்தியோகஸ்தர்கள், கைக்கூலி கொடுப்பவர்கள் ஆகிய இவர்களே நீக்கப்படுவர்.

எனது பிரஜைகள் என்னைக் கண்டு பழகுவதற்கு இலகுவாயிருப்பதற்காக டாம்பீகமானபட்டு உடைகளையும் ஆபரணங்களையும் தரிப்பதில்லையென்று தீர்மானித்திருக்கிறேன்.

வழிப் போக்கர்களுக்கு வசதியாக ஏற்படுத்தப்பட்டிருக்கும் சத்திரங்கள், கிணறுகள், வைத்தியசாலைகள் முதலியவைகளின் மேற் பார்வைக்கு வரிகளிலிருந்து சிறிது ஒதுக்கி வைத்திருக்கிறேன். அன்றியும் எனக்குமுன் அரசுபுரிந்த மகமது டோக்ளாவின் அக்கிரம தண்டனைகளால் இறந்து போனவர்களின் பந்துக்களைக் கண்டுபிடித்து அவர்களுக்கு உபகாரச் சம்பளம் கொடுக்கத் தீர்மானித்திருப்பதோடு அவ்வாறு செய்ததற்கு சாக்ஷியாக அவர்களிடம் பத்திரங்கள் எழுதிவாங்கி அவற்றையெல்லாம் ஒரு பெரிய பெட்டியில் வைத்துப் பூட்டி அவ்வரசன் கல்லறைக்குள் வைக்கும்படி செய்யத் தீர்மானித்திருக்கிறேன்.

என்னுடைய ராஜ்யத்தில் வயோதிகத்தாலாவது காயங்களாலாவது வேலை செய்ய முடியாமலிருப்பவர்களுக்குக் கூடிய உதவிசெய்யும்படி திட்டம் செய்திருக்கிறேன்; இவைகளே அச்சாசனத்தில் எழுதப்பட்டிருந்தவை. என்னே பிருஸ்ஷா அரசரின் நீதிதவறாத பேருபகாரம்!

# துளஸியின் மகிமை

(கோம்பை. என். காமையா)

(1) துளஸி என்பது ஒரு வகைச் செடி. நமது நாட்டில் இது எங்கும் பயிராகும். துளஸியில் இரண்டு வகை யுண்டு. ஒன்றின் இலை பச்சைப் பசே ரென்றிருக்கும், இதற்கு நற்றுளசி என்று பெயர். மற்றொரு வகையோ கருமை கலந்த பசுமை நிறமானது. இதைக் கருந்துளசி என்பார்கள். மேற் சொன்ன துளசியை ஸ்ரீ வைஷ்ணவர்கள் திருத்துளாய் என்று பெயரிட்டிருக் கிற மகிமையைப்பற்றி நண்பர்கள் புராண மூலமாய் அறிந்து கொள்ளலாம். அதற்கிருக்கும் மகிமையை ஒரு வியில் ஸர்ஜன் பரிக்ஷித்துப் பார்த்த விபரத் தைப்பற்றிச் சிறிது கூறுகிறேன். சில காலத்திற்கு முன் துளசிக்காட்டுக் கிடையில் ஒரு பிரேதம் கிடந்தது. அதைப் போலீஸார் கண்டெடுத்து மெடிகல் பரிசோதனைக்காக அனுப்பினர். ஸர்ஜன் அவர்கள் அந்தப் பிணம் சிலதினங்களுக்கு முன்முன் அக்காட்டில் விழுந்திருக்கவேண்டு மென்று அபிப்பிராயப்பட்டார். ஆனல் சாட்சிகள் மூலமாய் வெகு நாட்களுக்கு முன்னரே கொலையுண்டதாகத் தெரிய வந்தது. அதைக்கண்டு ஆச்சரிய மடைந்து பிணம் அழுகி மண்ணுகாமல் அத்தனை காலமிருப்பதற்கென்ன காரணமென்றுலோசித்துத் துளசிச் செடிக்கு அவ்வித சக்தி இருக்கவேண்டு மென்று யூகித்தார். உடனே ஒரு பெட்டைக் கோழியைக் கொன்று அச் செடிகளுக் கிடையிற் போட்டுச் சில தினங்கள் கழித்துப் போய்ப் பார்க்கை யில் அது நாறுமலும் அழியாமலுமிருந்தது. உடனே பிரேதத்தை யழுக வொட்டாமற் காப்பாற்றும் சக்தி, துளசிக்கு உண்டென்று தெளிந்தனர். மேலும் இந்தச் செடியின் வாசனைபடும் இடங்களில் கொசுகு அண்டாது. துளசியின் மணம் காற்றைச் சுத்தம் செய்யும். ஆதலால் இந்தச் செடி வளா ரும் இடங்களில் விஷ ஜுரம் பரவாது. துளசியின் சாறு மருந்தாக உதவு கிறது. ஆகையால் இது ஒரு சிறந்த மூலிகை ஆகும்.

## மேல் வரும்படி.

இது யார் எவரை எங்குபார்த்தாலும் கேட்கும் ஒரு கேள்வி! கிழவிகூட "அப்பா! என்ன வேலையி லிருக்கிறாய்? எவ்வளவு சம்பளம்! மேல் வரும்படி வருமா? என்கிறாள். கடைசி வினு விற்கு "இல்லை பாட்டி" என்றால் "ஆள்" சொட்டி அஸ் வாரஸ்ய மடைகிறாள். இன்னும் சந்தைக்கு மாடு பிடிப்பதற் காகச் சோற்றையும் பணத்தையும் மூட்டை கட்டிக்கொண்டு போவதுபோல் விசேஷமாக மாப்பிள்ளை பிடிக்கப்போகின்றவர் கள் மாப்பிள்ளையின் இந்த "மேல் வரும்படி" யைப்பற்றி விசேஷமாகக் கவனிக்கிறார்கள். இதன் பொருள்தான் என்ன? அநேகமாக அல்ல வழி வருமானமென்பதுதானே?

## அறிஞரின் அமுதமொழிகள்

K. S. மணவாளன்.

1. 'The simulated friendship of an enemy is like a smouldering fire.'

பகைவர் நேயம் (போலிநட்பு) புகையும் நெருப்பும்.

2. 'He that lendeth looseth double.' (*Money and Friendship*)

எவனொருவன் கடன் கொடுக்கின்றானோ அவன் இருவிதத்தில் நஷ்ட மடைவான். (தான் கொடுத்த பணமும் இரண்டாவது அடைதற்கரிய நட்பும்)

3. 'A soft answer turneth away wrath but a grievous word stirreth anger.'

இன்சொல் கோபத்தை தணிக்கும்; வன்சொல் கோபத்தை விளைக்கும்.

4. 'Beauty without virtue is a flower without fragrance.'

கற்பும் நல்லொழுக்கமுமில்லா அழகு மணமில்லா மலர்போன்றதாம்.

5. 'Money spent on brain will never go in vain.'

வித்தையின்பொருட்டு செலவிட்ட பணம் வீணாகாது.

6. Trust no future however pleasant.

எத்தகைய நன்மை பயப்பதாயினும் வருவது நினையாதே.

### வளையல் வேண்டாம் ! கையை விட்டால் போதும் !

வாலிபனுக்கு 'விவாகம் ! ஊர்வலம் !' என்னும் இவ்வார்த்தைகளைக் கேட்கக் கேட்க வெகு ஆவல்தான் ! குதூகலந்தான் ! கொண்டாட்டந்தான் ! பெண்களைப்பற்றி யாராவது பேசத் தொடங்கிவிட்டால், பசி தாகம் நித்திரை இவைகூடப் பெரிதல்ல. இந்த வைபவங்களெல்லாம் தாண்டி, இல்லறவாழ்க்கையில் ஈடுபட்டு உழன்றபின்னரோ "வளையல் வேண்டாம்! கையை விட்டால் போதும்" என்னும் பரிதாபநிலை. "ஆம் ஐயா ! தெரியாமல் மோசம் போனேன், இல்லற வாழ்வே நீறல் மூடப்பட்ட நெருப்பு" என்னும் அனுபவம் அதற்குப் பிறகே ஏற்படுகிறது.




# கிருஷ்ணஸிங் அல்லது துப்பறியும் சீடன்.

(445-ம் பக்கத் தொடர்ச்சி)

**ஆரணி-குப்புசாமி முதலியார்.**

நடுவீட்டின் படிகளில் ஏறியபோது மணியடிக்க வில்லை. அவனும் எதிர்பார்க்கவில்லை. ஏனெனில் முன் சென்றபோது மணியடிக்கவில்லை. அத்துடன் அங்கிருக்கும் வேதம்மாள் வீட்டின் குத்தகைக்காரி யாதலால் அடிக்கடி அங்கு யாராவது வந்துகொண்டே யிருப்பார்கள். ஆகையால் அவள் வீட்டில் சந்தேகத்தை யுண்டாக்கத் தக்க விஷயம் இராது.

ஆனந்தஸிங் கதவைத் தட்டினான்; சந்தடியே யில்லை. இங்கு சூது ஒன்றுமிராது. தாராளமாய்ச் செல்லலாம் என்று தனக்குத் தானே கூறிக் கொண்டே கள்ளச் சாவியால் பூட்டைத் திறந்து உள்ளே சென்றான். அங்கு தீபம் கொஞ்சமாய் எரிந்துகொண் டிருந்தது. சற்று நேரம் உற்றுக் கேட்டுப் பிறகு வெளிக் கதவை மூடிக்கொண்டு வேறு அறைக்குச் சென்றான்.

எங்குமே தீபம் மங்கலாய் எரிந்துகொண் டிருந்தது. அங்கு உள்ளே யிருந்த ஒரு படுக்கை யறைக்குச் சென்றான். அது வேதம்மாளுடைய மகளின் அறை. அங்கிருந்த யாவற்றையும் துரிதமாய்ச் சோதித்தான்.

அங்கிருந்த பீரோவின் ஒரு அறையில் மனோன்மணியின் படமும், அவளும் இராஜகோபாலும் பாங்கிக்குச் சென்று பத்தாயிரம் ரூபாய் உண்டியை மாற்றும்போது அவள் அணிந்திருந்ததாய்க் கூறப்பட்ட உடையும் பொய்ச்சிகையும் இருந்தன. ஓகோ! இவளே மனோன்மணியைப் போல் இம் மாறு வேடமணிந்து உண்டியை மாற்றி யிருக்கிறாள்" என்று அறிந்து கொண்டான். "ஏறக்குறைய யிப்படித்தான் இது நடந்திருக்கு மென்று என் புத்தியில் பட்டிருந்தது" என்று தனக்குத் தானே கூறிக்கொண்டான்.

சரி, இங்கறிய வேண்டிய திவ்வளவே என்று கூறிப் படத்தையும் உடையையும் இருந்த விடத்திலேயே வைத்துவிட்டு அங்கிருந்துவெளிப்பட்டான்.

இப்போது அவன் நடக்கை மிக்க சுறு சுறுப்பா யிருந்தது. ஏனெனில் நேரமாய்விட்டது. அண்டை வீட்டில் இப்போது யாருமில்லை யேனும் சீக்கிரத்தில் வந்துவிடக் கூடும். அவன் சீக்கிரத்தில் பின் அறைக்குச் சென்று அங்கிருந்த கள்ள அலமாரி யருகிற் சென்றான்.

முன்னாள் முரட்டு மனிதன் அவ்வழியாய் வரும்போது அக் கதவைத் திறந்த உளவை நன்றாய்ப் பார்த்துக்கொண் டிருக்கிறான். அதைத் திறந்ததே யாவரும் எச்சரிக்கை யடையும்படி மணி யடிக்கும் என்பதும் அவன் அறிவான். ஆயினும் துணிகரமாய் அதைத் திறந்து அப்புறம் இருந்த இருண்ட விடத்தில் நுழைந்தான். இப்போது ஆபத்து நேர்ந்தாலும் நேரிடு மென்று அவனுக்கு நன்றாய்த் தெரியும்.

ஆனந்தஸிங் எவ்வளவு தைரியசாலியே யாயினும் தான் வந்த வழி யுடனே மூடிக்கொண்ட பின் இருளில் பிரவேசித்தபோது திடீரென்று

துஷ்டராகிய கொலையாளிகள் மத்தியில் சிக்கிக்கொண்டாலும் சிக்கிக்கொள்ளலாம் என்று அவன் மனதிற்பட்டதே மனதில் திகில் விழுந்தது.

மெதுவாய்த் தன்னிட மிருக்கும் சிறுவிளக்கை யேற்றிப் பார்த்தான். அங்கிருந்த அறை ஏழைகள் வசிக்கும் அறைபோல் இருந்தது. அதற்கப்புறம் இருந்த அறைக்குள் நுழைந்தான். அது வேதம்மாள் அறைபோல் நன்ருயலங்கரிக்கப் பட்டிருந்தது. அந்த அறையில் மத்தியிலிருந்த மேஜைமேல் கடிதம் முதலிய எழுதுகருவிகள் இருந்தன. அதன்றி நாலைந்துபேர் பேர் உட்கார்ந்திருந்து அப்படியே விட்டெழுந்து போனதுபோல் நாலைந்து சோபாக்களும், நாற்காலிகளும் அந்தந்த விடத்திலேயே இருந்தன. பக்கத்தறை இரண்டுபேர் சயனித்துக்கொள்ளும் அறையெனத் தெரிந்தது. ஆயினும் ஆனந்தவலிங் முன்னே அந்தமேஜையைக் கவனித்தான்.

மேஜையின் ஒருபக்கம் இராஜவேலின் புகைப்படம் இருந்தது. அதன் அடிப்பக்கம் "புருவத்தின்மே லிருக்கும் காயவடு கவனமிருக்கட்டும்." என்று எழுதியிருந்தது.

அதைக்கண்டதே ஆனந்தவலிங் "இப்படித்தான் நடக்குமென்று நான் அறிவேன். இராஜவேல் போலவும் மனோன்மணிபோலவும் வேடம் போட்டுக்கொள்ளும் இடம் இதுதான்" என்று தனக்குத்தானே கூறிக் கொண்டான்.

மறு நிமிடம் அங்கிருந்த ஒரு கடிதத்தைப் பார்த்தான். அதில், "என் காதலரே! என் அன்பான இராஜவேல்" என்று இரண்டு மூன்றுதரம் எழுதியிருந்தது.

ஆனந்தவலிங் "ஆகா! யாராவது பார்த்தால் மனோன்மணி இராஜவேலுக்குக் கடிதங்கள் எழுதுவது இங்குதான் என்று எண்ணிக்கொள்வார்கள். இந்தக் கள்ளப்பயல்கள் மிக்க சாமார்த்தியக்காரர்களே. அதிலும் இக்கள்ளக் கடிதங்களை யெழுதும் கள்ளப்பயல்கள் கள்ளக்கையொப்பமும் வைத்துக் கடிதங்கள் எழுதுவதில் மிக்க தேர்ச்சி யடைந்தவர்கள். "பயல்களே! நீங்கள் என்ன கெட்டிக்காரராயினும் கொஞ்சம் அளவு மீறிப்போய் விடாதீர்கள். கடைசியில் முக்கியமான இம்மர்மங்கள் வெளியாய்விட்டன" என்று தனக்குத்தானே கூறிக்கொண்டான்.

அச்சமயம் திடீலென்று திடுக்கிட்டான். ஏனெனில் இரண்டுதரம் அவசரமாய் மணியடிக்கும் சத்தம் கேட்டது. அந்த அறையில் ஒரு மூலையில் சில உடைகள் நீளமாய்த் தொங்கிக்கொண் டிருந்தன. ஆனந்தவலிங் சட்டென்று அவற்றின் பின் மறைந்துகொண்டு வரும் ஆட்களைப்பார்க்க ஒரு வுடையில் துவாரம் செய்துகொண்டான்.

இப்போது அவன் நிலைமை மிக்க அபாயகரமானது. எதைச் செய்யவும் முன்பின் அஞ்சாத துணிகரமுடைய கொலைப்பாதகரிடம் சிக்கிக்கொண்டிருப்பது பிராணபத்தேயாகும். ஆனல் ஆனந்தவலிங் எதற்கும் அஞ்சாமல் துணிகரத்தோடு நின்ருன்.

மறு நிமிடமே ஒரு ஆள் உள்ளேவந்து அந்த அறையைக் கடந்துபோய் முன்னேயிருக்கும் அறைக்குச்சென்று அங்கிருந்த விளக்கை யேற்றினன். ஆனந்தவலிங் சட்டென்று பாய்ந்து அவன் தொண்டையை யிறுக்கிக் கொன்றுவிட நினைத்தான். மறுநிமிடம் இச்சமயம் பேசாமலிருந்தால் எவ்வளவோ மர்மங்களை யறியலாம் என்று நினைப்பு வந்ததால் அங்கேயே நின்றுவிட்டான்.



# வர்த்தமானப்பகுதி

மழையே பெய்யாத இடம்:—மெக்ஸிகோவில் பல பாகங்களில் மழையே பெய்வது கிடையாதாம். அங்கு மழை பெய்வதை ஒருவரும் கண்டதில்லையாம்.

***

நூற்றுக்கு ஐந்து:—ரயில்வே என்ஜினில் உண்டாகும் 100 பங்கு உஷ்ணத்தில் என்ஜின் 5 பங்கு உஷ்ணத்தை மட்டுமே தாம் உபயோகிக்கிறது.

***

பூகம்பப் பிரயாணம்:—ஒரு பூகம்பம் ஒரு விநாடிக்கு 470 முதல் 530 அடி வரையில் பிரயாணம் செய்கிறதாம்.

***

இங்கிலாந்தில் பிரமசாரிகள்:—இங்கிலாந்திலும் வேல்ஸிலுமாகச் சேர்ந்து 1,752,719 பிரம்மச்சாரிகளிருக்கின்றனராம். அவர்களில் லண்டன்மா நகரில் மட்டும் 213,202 பேர்கள் வசிக்கின்றனராம்.

***

ஒரு தபால் சேவகனின் 39-வருஷ நடை:—பால் டிமோர் என்னும் நகரத்தில் தன் தபால் சேவகன் வேலையை 39-வருஷங்களுக்குப்பின் விட்டு நீங்கிய ஜான். இ. ரார்க் என்பவர் தான் வேலையிலிருந்த 39-வருஷத்திற்குள் 139,000 மைல்கள் நடந்துள்ளாராம். 23,000,000 கடிதங்களும் பட்வாடா செய்துள்ளாராம்.

நிலக்கரியின் எரியும் சக்தியை அதிகமாக்கும் முறை:—நிலக்கரியின் மேல் சோடா ஜலத்தை சிறிது தெளித்தால் அதன் எரியும் சக்தி அதிகமாகிறதாம்.

***

கைதியின் சம்பாத்தியம்:—ஓஹியோ அரசாங்கச் சிறையிலிருந்து விடுவிக்கப்பட்ட ஒரு கைதி போர் விஷயமான நாவல்களெழுதுவதில் சிறையிலேயே பெயர் பெற்றவனுய ஒரு வருஷத்தில் 1400-பவுன் சம்பாதித்ததாகச் சொல்லப்படுகிறது.

***

2,400 வருஷங்களுக்கு முந்திய சமாதி:—சமீபத்தில் 2,400 வருஷங்களுக்கு முந்திய ஓர் பெண்ணின் சமாதியில் முரட்டுப் பானைகளும், சீப்புகளும், உடைந்த கண்ணாடிகளும், வெள்ளி பூசிய வெண்கலச் சட்டங்களும் கிடைத்தனவாம். அவ்வளவு காலத்திற்கு முன்பே பெண்கள் தங்களை அழகு படுத்திக்கொள்ள இச் சாமான்களை உபயோகித்துள்ளார்களென இதனுல் ஊகிக்கப்படுகிறது.

***

2,50,000 வார்த்தைகள்:—இங்கிலீஷ் பாஷையில் சுமார் 2,50,000 வார்த்தைகள் இருக்கின்றனவாம். உலகத்தின் பாஷைகளில் அதிகமான எழுத்துக்களுடையது சீன பாஷைதான். ஆனுல் அதில் 15,000 வார்த்தைகளே இருக்கின்றன.

# "ஆனந்தபோதினி" பஞ்சாங்கம்.

**சுக்கில௵ சித்திரை௴—கலியுகாதி 5031, சாலிவாகனம் 1852,**
**பசலி 1338—கொல்லமாண்டு 1104—ஹிஜ்ரி 1347,**
**இங்கிலீஷ் 1929௵—ஏப்ரல்௴—மே௴**

| சித்திரை | ஏப்ரல் | வாரம். | திதி. | நக்ஷத்திரம் | யோகம். | விசேஷங்கள். |
|---|---|---|---|---|---|---|
| 1 | 13 | சனி | சது24-53 | ரோ45-48 | அ45-48சி | வருஷப்பிறப்பு |
| 2 | 14 | ஞா | பஞ்18-23 | மிரு41-23 | சித்60 | சஷ்டி, சுபமுகூர்த்தம் |
| 3 | 15 | திங் | சஷ்12-20 | திரு37-25 | சி37-25-அ | கங்கோற்பத்தி,காதுகுத் |
| 4 | 16 | செவ் | சப்6-48 | புன34-3 | சித்60 | அசோகாஷ்டமி, எருவிட |
| 5 | 17 | புத | அஷ்1-53<br>நவ57-45 | பூச31-23 | சித்60 | ஸ்ரீராம நவமி, ஸ்ரீராம<br>[ஜெயந் |
| 6 | 18 | வியா | தச54-30 | ஆயி29-30 | சி29-30அ | கரிநாள், தர்மராஜ தசமி |
| 7 | 19 | வெ | ஏகா52-8 | மக28-0 | ம28-0சி | சர்வமத்வ ஏகாதசி |
| 8 | 20 | சனி | து50-48 | பூர28-30 | சி28-30ம | வாமன தமன துவாதசி |
| 9 | 21 | ஞா | திர50-33 | உத்29-35 | அமி60 | அனங்கபூஜை விரதம் |
| 10 | 22 | திங் | சது51-25 | அஸ்31-40 | சி31-40பி | விதைவிதைக்க,கதிறுக் |
| 11 | 23 | செவ் | ○53-23 | சித்35-0 | சித்60 | ○சித்ரா பௌர்ணமி |
| 12 | 24 | புத | பிர56-50 | சுவா39-33 | சித்60 | |
| 13 | 25 | வியா | துதி60 | விசா45-8 | சித்60 | |
| 14 | 26 | வெ | துதி1-15 | அனு51-40 | சி51-40ம | |
| 15 | 27 | சனி | திரி6-43 | கே58-58 | சித்60 | |
| 16 | 28 | ஞா | சது12-40 | மூல60 | அமி60 | |
| 17 | 29 | திங் | பஞ்19-0 | மூல6-40 | சி6-40ம | |
| 18 | 30 | செவ் | சஷ்25-8 | பூரா14-8 | சித்14-8அ | |
| 19 | 1 | புத | சப்30-25 | உத்20-33 | அ20-33சி | |
| 20 | 2 | வியா | அஷ்34-25 | திரு26-43 | சித்60 | |
| 21 | 3 | வெ | நவ36-48 | அவி30-50 | சித்60 | |
| 22 | 4 | சனி | தச37-23 | ச32-55 | அ32-55ம | |
| 23 | மே 5 | ஞா | ஏகா36-3 | பூர53-45 | சி33-45அ | சர்வமத்வ ஏகாதசி |
| 24 | 6 | திங் | து32-50 | உத்32-25 | சித்60 | சீமந்தம்,சுபகாரியம்செய்ய |
| 25 | 7 | செவ் | திர28-8 | ரே29-23 | சித்60 | மாச சிவராத்திரி |
| 26 | 8 | புத | ச●21-45 | அஸ்25-5 | ம25-5சி | சர்வத்திர அமாவாசை |
| 27 | 9 | வியா | அமா14-30 | ப✲19 43 | சி19-43ம | கிருத்திகை, சூரிய கிரஹ |
| 28 | 10 | வெ | பிர6-28<br>துதி58-13 | கிரு13-40 | சி13-40ம | வைசாகசுத்தம்,<br>சந்திரதெரிசனம் } [ணம் |
| 29 | 11 | சனி | திரி50-3 | ரோ7-23 | அ37-23சி | அக்ஷயத்திரிதிகை |
| 30 | 12 | ஞா | சது42-8 | மிரு1-8<br>திரு55-25 | சித்60 | இராமாநுஜ ஜயந்தி, ரீவா<br>[நதிபுஷ்காம் |
| 31 | 13 | திங் | பஞ்34-55 | புன50-30 | அ50-30-சி | சங்கரஜயந்தி, விவாகம் |

| புத | சூ-சுக்<br>குரு | ராகு | செ |
|---|---|---|---|
| — | 3-மே-ராகு<br>து-கே-மே-பு<br>17-கட-செவ்<br>,, ரிஷ-புத<br>22-மீன-சுக்<br>30-ரிஷ-குரு | | — |
| சனி | கே | | |

**PRINTED & PUBLISHED BY N. MUNISAWMI MUDALIAR,**
**AT THE "ANANDA BODHINI" POWER PRESS,**
**LAWYER CHINNATHAMBI MUDALI ST., MADRAS.**